உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

குமாரதேவர் திருவாய்மலர்ந்தருளிய

# சுத்தசாதகம்

மூலமும்,

திருக்கைலாயபரம்பரைத்திருத்துறையூராதினம்.

ஸ்ரீமத் - சொக்கலிங்கசிவப்பிரகாச

பண்டாரசந்நிதிகள்

இயற்றிய விருத்தியுரையும்.

ஷை திருத்துறையூர் ஆதீனம்

ஸ்ரீமத்

சிதம்பர சிவப்பிரகாச பண்டாரசந்நிதிகள்

கட்டளையின்படி,

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

பூவை-கலியாணசுந்தரமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

சென்னை:

கலாரத்நாகரமச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

சௌமிய௵-ஆனிமீ.

1909.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருக்கைலாச பரம்பரைத் திருத்துறையூர் ஆசாரியர்கள் பரிபூரணதசை யடைந்த தலமும் திருநக்ஷத்திரமும் வருமாறு.

| எண். | ஆசாரியர்கள். | பரிபூரணஸ்தலம். | மாதம். | திருநக்ஷத்திரம். |
|---|---|---|---|---|
| | மெய்கண்டதேவர். | திருவெண்ணெய் நல்லூர் | ஐப்பசி. | சுவாதி. |
| | அருணந்திசிவாசாரியர். | திருத்துறையூர். | புரட்டாதி | பூரம். |
| | மறைஞானசம்பந்தசிவாசாரியர். | திருக்களாஞ்சேரி. | ஆவணி. | உத்தரம். |
| | உமாபதிசிவாசாரியர். | கொற்றவன்குடி. | சித்திரை. | அஸ்தம். |
| | அருணமச்சிவாயதேசிகர். | ஷை | மார்கழி. | திருவாதிரை |
| | சிவப்பிரகாசசித்தர். | பொதிகை. | ஆடி. | அச்சுவினி. |
| | நமச்சிவாயதேசிகர். | திருவாவடுதுறை. | தை. | அச்சுவினி. |
| க | சிவப்பிரகாசதேசிகர். | பட்டீச்சுரத்துக்கடுத்த வடதளி | ஆனி. | பரணி. |
| உ | ஞானக்கூத்தசிவப்பிரகாசதேசிகர். | சிவன்பாக்கம். | மாசி. | மகம். |

| எண். | ஆசாரியர்கள். | பரிபூரணஸ்தலம். | மாதம். | திருநக்ஷத்திரம். |
|---|---|---|---|---|
| ௩ | மூலலிங்கசிவப்பிரகாசதேசிகர். | தரணி. | பங்குனி. | உத்தரம். |
| ௪ | சிதம்பரசிவப்பிரகாசதேசிகர். | கொற்றவன்குடி. | வைகாசி. | திருவாதிரை, |
| ௫ | குமாரதேவசிவப்பிரகாசதேசிகர். | விருத்தாசலம். | புரட்டாதி | பூரம். |
| ௬ | நமச்சிவாயசிவப்பிரகாசதேசிகர். | பசும்பலூர். | சித்திரை. | அஸ்தம். |
| ௭ | நன்னூற்சிவப்பிரகாசதேசிகர். | அரியலூர். | வைகாசி, | விசாகம். |
| ௮ | அருணைச்சிவப்பிரகாசதேசிகர். | திருவண்ணமலை. | ஷை | ஷை |
| ௯ | கருணைச்சிவப்பிரகாசதேசிகர். | ஷை | ஷை | ஷை |
| ௧௦ | பரஞ்சோதிசிவப்பிரகாசதேசிகர். | துறையூர். | வைகாசி. | சுவாதி. |
| ௧௧ | நல்நாயகசிவப்பிரகாசதேசிகர். | ஷை | தை. | பூசம். |
| ௧௨ | சிற்றம்பலசிவப்பிரகாசதேசிகர். | பட்டீச்சுரம். | வைகாசி. | மகம். |
| ௧௩ | பொன்னம்பலசிவப்பிரகாசதேசிகர் | ஷை | மாசி. | மகம். |
| ௧௪ | சிதம்பரசிவப்பிரகாசதேசிகர். | கொற்றவன்குடி. | ஆடி. | உத்தரம். |
| ௧௫ | கருணைச்சிவப்பிரகாசதேசிகர். | துறையூர். | ஆடி. | அச்சுவினி. |
| ௧௬ | நஞ்சுண்டசிவப்பிரகாசதேசிகர். | ஷை | ஷை | ஷை |
| ௧௭ | குழந்தைவேல்சிவப்பிரகாசதேசிகர் | ஷை | ஷை | ஷை |
| ௧௮ | வைத்தியலிங்கசிவப்பிரகாசதேசிகர் | ஷை | ஆனி. | பரணி, |
| ௧௯ | குமாரசிவப்பிரகாசதேசிகர். | ஷை | மாசி. | விசாகம், |
| ௨௦ | சொக்கலிங்கசிவப்பிரகாசதேசிகர். | விருத்தாசலம். | வைகாசி. | பூரம். |

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கைலாயபரம்பரைத்

# திருத்துறையூராதீனவரலாறு.

---

ஸ்ரீகண்டபரமசிவன் திருக்கைலாச மலையிலே, கல்லால மர நிழலிலே, தென்முகத்தெய்வப் பரமாசாரியராய் வீற்றிருந்து, இரௌரவாகமத்திலே, பாசவிமோசனபடலத்திலே, சர்வசாரமாய் விளங்கும் பன்னிரண்டு சூத்திரமாகிய பரப்பிரம சூத்திரத்தைச் சிவஞானபோதமெனப் பெயர்தந்து அதனைத் திருநந்திதேவருக்கு அதன்பொருளோடு உபதேசித்தருள; அவர் சனற்குமாரமுனிவருக்கும், அம்முனிவர் சத்தியஞானதரிசனிகளுக்கும், அவர் பரஞ்சோதிமுனிவருக்கும் அருளிச்செய்தார். பரஞ்சோதிமுனிவர் திருப்பெண்ணைகடத்திலே, வேளாளகுலத்திலே அவதரித்து, திருவெண்ணெய்நல்லூரில் நன்மாமனார்வீட்டில் எழுந்தருளியிருந்த இரண்டுவயதுடைய சுவேதவனப்பெருமாளுக்குச் சிவதீக்ஷைசெய்து, மெய்கண்டதேவரெனத் திருநாமந்தரித்து, அச்சிவஞானபோதத்தை உபதேசித்தருள; அதை அவர் தமிழில்மொழிபெயர்த்து, வார்த்திகமென்னும் பொழிப்புரைசெய்து, மாணக்கர்கள் நாற்பத்தொன்பதின்மருக்கும் உபதேசித்தருளினர். அவர்களுள்ளே திருத்துறையூரில் ஆதிசைவகுலத்திலவதரித்துச் சகலாகமபண்டிதரென்னும் காரணப்பெயர்பெற்ற அருணந்திசிவாசாரியார் தாம் அருளிச்செய்த சிவஞானசித்தியார், இருபாவிருபது என்னும் சித்தாந்தசாஸ்திரங்களோடு சிவஞானபோதத்தையும்,

திருப்பெண்ணாகடத்திலே பிராமணர்குலத்திலவதரித்த மறைஞானசம்பந்தசிவாசாரியருக்கு உபதேசித்தருள; அவர் சிதம்பரத்தைச்சார்ந்த திருக்களாஞ்சேரியில் எழுந்தருளியிருந்து கொண்டு, தில்லைவாழந்தணர்களுள் ஒருவராகிய உமாபதிசிவாசாரியருக்கு உபதேசித்தருளினார்.

அவர் கொற்றவன்குடியில் வீற்றிருந்துகொண்டு, பௌஷ்கராகமத்திற்கு வியாக்கியானத்தையும், தமிழில் சிவப்பிரகாசமுதலிய நூல்களையுமியற்றி, அருணமச்சிவாயதேசிகர்முதலிய மாணாக்கர்களுக்கு உபதேசித்ததுமன்றி, சபாநாயகர்விடுத்தருளிய "அடியார்க்கெளியன்" என்னும் திருமுகத்தின்படி பெற்றான்சாம்பானுக்கு முத்தியையளித்து, அதுகாரணமாக அவன்மனைவிக்கும் அரசன்முதலாயினோர்க்கும் உண்டாகிய ஐயமொழிதற்கு முள்ளிச்செடிக்கும் முத்திகொடுத்தருளினார். அதுவன்றியும், சபாநாயகர் தில்லைவாழந்தணர்களுக்குச் சொப்பனத்திலேதோன்றி "நாம் உமாபதிபேடகத்துளிருக்கின்றோம்" என்றருளியதையுணர்ந்து, தம்மாலருளிச்செய்யப்பட்டுப் பேடகத்துளிருந்த கோயிற்புராணத்தைச் சந்நிதியில் அரங்கேற்றியருளினார். அருணமச்சிவாயதேசிகர் திருவாவடுதுறையில் வீற்றிருந்த சித்தர்சிவப்பிரகாசதேசிகருக்கநுக்கிரகிக்க; அவர் திருமூவலூரிலே வேளாளகுலத்திலவதரித்துத் துறவுபூண்டுள்ள நமச்சிவாயமூர்த்திகளுக்கு அநுக்கிரகித்தனர். நமச்சிவாயமூர்த்திகள் கும்பகோணத்திலே வேளாண்செட்டிகள்மரபிலவதரித்து ஏழுவயதிற்றானே கலைஞானங்களில்வல்லவராய்த் தலயாத்திரைசெய்துகொண்டு திருவாவடுதுறைக்குவந்த சிவப்பிரகாசதேசிகருக்குத் தீக்ஷைசெய்து, அவரது அநுபவமுதிர்ச்சியைநோக்கி, ஆலிங்கனஞ்செய்துகொண்டு, "இக்குருபரம்பரையை விளக்கிவருவாயாக" என்று கட்டளையிட்டு, ஆன்மார்த்தபூஜைமுதலியவற்றைத் தாம் ஒப்புவித்துவிட்டுத் தியானநிலையில்வீற்றிருந்தனர்.

சிவப்பிரகாசதேசிகர் தெய்வீகசித்தியுடையவராய்ச் சிதம்பரத்தையடைந்து சபாநாயகரைத்தரிசிக்குங்கால், கரத்திலே ஒரு சிவலிங்கமிருக்கக்கண்டு திருவருளைவியந்து, தினமும் தரிசித்துக்கொண்டு உமாபதிசிவாசாரியர்திருமடத்தில் சிலநாள் வசித்து, திருவாவடுதுறையையடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து, திருக்கரஞ் சிவக்கத் தாளமொற்றிக்கொண்டு தேவாரமோதுங்கால், கையிலே ஓர் திருத்தாளமிருக்கக்கண்டு, திருவருளைப்புகழ்ந்து, மடத்துக்கெழுந்தருளினர். அந்நாளிலே இராயவேலூரிலே அரசுபுரிந்த விருபாக்ஷிராயர்கட்டளையால் நடுநாட்டையாண்ட ஓர்வடுகன், தில்லைக்கோவிந்தராஜப் பெருமாளுக்குச் சகல சிறப்புக்களையு மேற்படுத்திச் சபாநாயகருக்கு நித்திய பூஜையையும் நிறுத்தி விட்டமையைத் தீக்ஷிதர் முதலியோராலுணர்ந்து, சன்மார்க்கங்களைப் போதித்தும் அவனுடன் படாமையால், சபாநாயகர் கட்டளைப்படி தீக்ஷிதர் முதலியவர்கள் கொண்டுவந் துபசரித்த சிவிகை முதலியவற்றை அங்கீகரித்து வேலூரை யடைந்தனர். அங்கே இலிங்கணபத்தரென்னும் மந்திரி வீரசைவ ராதலின் அம்பலவாணர் அசரீரிமொழியாலருளிய படியே, ஆன்மார்த்த சிவலிங்கப் பெருமானைச் சிறுபேடகத் தெழுந்தருளு வித்துத் தரித்துக்கொண்டு, வீரசைவா சாரியராகச்சென்று, மந்திரியா லுபசரிக்கப்பெற்று, உத்தேசித்துச் சென்ற காரியத்தை முடித்து, அரசன் வேண்டு கோளின்படி மழையில்லாத அந்நாட்டிலே மிகுமழை பொழிவித்து, அரசனால் திருவண்ணாமலையிலே ஏழுகிராமங்களை விடுத்துக் கட்டுவித்த திருமடத்திற் கெழுந்தருளுங்கால், பெண்ணையாறு பெருகி வருதலைக் கண்டு விபூதியாற்றடுத்துச்சென்று, திருமடத்தி லிருந்து கொண்டு, குமாரசுவாமிதேசிகர் முதலியோர்க் கநுக்கிரகித்தது மன்றி அத்துவித வெண்பா முதலிய வீரசைவ சாஸ்திரங்களையு மருளிச்செய்தார்.

பின்பு திருக்காளத்திக் கெழுந்தருளி, மத்வாசாரிய பீடத் தாரொருவரை வாதில் வென்று, தாரணதீக்ஷை புரிந்து, தா ளிதங் காளத்தியார் எனத் தீக்ஷா நாமந்தரித்து, அவர் முத லியோருடன் சென்று, உடும்பை சுப்பிரமணியமென்னும் ஸ்த லத் தருகில் ஓர்தடாகக் கரையில் மூன்றுதினம் தியானத் திருக்குங்கால், சிவபெருமான் கனவி லருளியபடி அவ்வூரி லுள்ள அன்பரால் உபசரிக்கப்பெற்று, அங்ககன்று, திருச்செங் கோட்டை யடைந்து, கேதாரியையருடைய சீஷர்கள் தமது தெய்வீகங் காணுதற்பொருட்டுக் கொண்டுவந்த கடலையை,

"வில்லார் மணிச்சபையின் வித்தகா கூடலின்முன்
கல்லானைக் கிக்கருத்திக் காட்டியவுன் - வல்லாண்மை
கட்டுரையே யாகிலிந்தக் கல்லே றெறீஇக்கடலை
யிட்டவிவர் முன்றினச்செய் யே."

என்னும் வெண்பாவையருளி அங்குள்ள கல்ரிஷபம் அருந் தும் படிச்செய்து, அவர்களை யடிமைகொண்டு, துறையூரிலே இலிங்கதுரை யென்பவர் ஒருதிரு மடங் கட்டுவித்து, சிலகி ராமங்களை விடுத்தமையே யன்றித் தினமும் பத்துப்பொன் னும் வேண்டியவையும் கொடுத் துபசரித்துவரச் சாந்தலிங்க சுவாமிகள் முதலியவர் களுக்கு அநுக்கிரகம் புரிந்து கொண்டு வீற்றிருந்தனர். அந்நாளிலே குருதரிசனஞ் செய்ய விரும்பி வரும்பொழுது, ஓரிரவில் திரிசிரபுரம் வருங்கால் எண்ணெ யில்லாமையால் காவிரி ஜலத்தினாலே தீவர்த்திகளை எரிக்கும் படி பணித்து, திருச்சோற்றுத் துறையிலே ஒரு ஆலமரத்தடி யிலிருந்த ஒருவனது குஷ்டரோகத்தை நிவர்த்தித்து, அக்கா லத்திலரசு புரிந்திருந்த சோழ ராஜனுக்கு நேர்ந்திருந்த பிரம கத்தியைத் தணித்து, திருக்கலய நல்லூருக்குச் சமீபமாக வரும்போது, ஆதிசைவ புத்திரனொருவன் சர்ப்பந் தீண்டியி றக்க அப்பிரேதத்தை மயானத்திற் கெடுத்துச் செல்லக்கண்டு,

அதை அவர்கள்பாற் கேட்டுவாங்கி, திருநீறு மந்திரித்துத் தெறித்து உயிர்ப்பித்து, ஞானக் கூத்தரெனத் திருநாமஞ்சாத்தி, அப்புத்திரரைச் சிவிகையில் வைத்துக் கொண்டு, திருவாவடுதுறையை யடைந்து, நமச்சிவாய மூர்த்திகளைத் தரிசித்து அணுக்கத் திருந்தனர்.

அந்நாளிலே நமச்சிவாய மூர்த்தி கட்கு ஐக்கியகாலம் சமீபிக்க, தாம் அருகிலிருந்து கிரியைக ளனைத்தையு முடித்து, தரிசனார்த்தம் அக்குரு மூர்த்தத் திருவுரு வொன்றமைத்துப் பிரதிஷ்டை செய்து, மறைஞான தேசிகருக்கு அபிடேகம் புரிந்தனர். அவர் சின்னாளிருந்து விதேகமுத்தி யடைந்தமையால், மறுபடியும் அம்பலவாண தேசிகரை அபிடேகம் புரிந்து, திருவாவடு துறையில் நிறுத்தி விட்டு, தாம் திருவண்ணாமலைக் கெழுந்தருளி வருங்கால், தமக்கு விதேக முத்தியடையுங் காலம் சமீபித் திருத்தலை யறிந்து, திருப்பட்டீச் சுரத்துக் கடுத்த நவலிங்க தீர்த்தக்கரையில் இறங்கி, அம்பலவாண தேசிகரை வரவழைத்து, அவர்க் கறிவிப்பனவற்றை யறிவித்து, அவ்விடத்திற்றானே திருவண்ணாமலை வீரசைவ ஆதீனத்திற்காக ஞானக்கூத்த தேசிகரை அபிடேகம் புரிந்து, ஆறுவது தினத்திலே சிவத்தியானத் திருக்குங்கால், பூமிவெடிக்க, அதிற்றோன்றிய ஒரு ஒளிப்பிழம்பால் திருமேனிகரைய மறைந்தருளினார்.

இஞ்ஞானக் கூத்ததேசிகர் விருத்தாசல புராணத்திற்கு ஓரரிய வுரையியற்றி யருளினர். இவருக்குப் பின்பட்டத்திற்கு வந்தார் பலர், ஏழாவது பட்டம் நன்னூற் சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள் ஷ்ை அத்துவித வெண்பாவிற்கு அரிய பெரியதோர் விருத்தியுரை அரும்புலவரனைவருங் கொண்டாட அருளிச்செய்தனர். இருபதாவது பட்டமுற்ற சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள், விருத்தாசலம் பெரிய நாயகி

யம்மையார் கொடுத் தருளிய ஞானப் பாலையுண்டு பதினறு சாஸ்திரங்களைத் திருவாய் மலர்ந்தருளிய குமார தேவர் பரம் பரையில் வந்த முத்தைய சுவாமிகளி னனுக்கிரகம் பெற்று அபார கல்வி வாய்ந்து சிவானுபவத் தையே சுவானுபூதியாகக் கொண்டிருந்து ஷை பதினறு சாஸ்திரங்களு ளொன்ருய இச் சுத்த சாதகத்திற்கு உலகோப காரமாக அரியபெரிய விருத்தி யுரையொன்று எழுதி வைத்தனர், இஃதன்றியும் பெரிய நாய கியம்மன் பிள்ளைத் தமிழ், குமாரதேவரபிஷேகமாலை, திரி பதார்த்த உண்மையுபதேசவிளக்கம் முதலிய நூல்களுமியற்றி யருளினர்.

இச்சொக்கலிங்க சிவப்பிரகாசபண்டார சந்நிதிகளுக்குப் பின்பட்டத்திற்கு வந்து தற்காலம் எழுந்தருளியிருப்பவர் சித ம்பர சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள். இவர் சோழவள நாட்டிலே, திரிசிரபுரத்திலே, வைதிக பிராமணர் குலத்திலே அவதாரஞ்செய்து சிதம்பரம் என்னும் பிள்ளைத் திருநாமம் பெற்றுத் தாய்தந்தைய ரிருவருக்கும் இன்பம் விளைய அன்பு, அறிவு, அடக்கம், ஆசாரம், நிராசை, சத்தியம், தவம், ஆரா ய்ச்சி, சிவநேசமுதலிய வெல்லா முடன்வளர வளர்ந்து, கல்வி பயிலத்தக்க ஐந்துபிராயத்துடனிருக்கையில், அக்காலத்தில் வடதேயத்தினின்றும் சில முனிவர்கள் சிவத்தல யாத்திரை யாகத் தென்தேய நோக்கிவந்து திரிசிரபுரத்துத் தங்குகை யில், இக்குழந்தையைச் சந்தித்து இக்குழந்தை உயர்ந்த பத விக்கு வருமெனுஞ் சிலக்குறிப்புகளை ஆராய்ந்து, தெரிந்து தங்களுட னழைத்துக்கொண்டு தென்தேயமுழுதும் தலயாத் திரைசெய்து மேற்றிசைத் தலங்களைத் தரிசித்துக்கொண்டு வடதேயம் இமயமலைபரியந்தம் சஞ்சாரஞ் செய்தனர். இதற் குள் வயது பதினைந்து ஆயிற்று. பின்னர் அம்முனிவர்களை விட் டுக் கீழ்த்திசையோரமாகத் திரும்பிக் கடல்யாத்திரைசெய்து கடைசியாகச் சென்னைமாநகரினை யடைந்தனர். இச்சென்னை

யில் சிலவருட மிருந்துகொண் டிருக்கையில் தக்க வித்துவ சிரோமணிகளுடன் அளவளாவியிருந்து வேண்டிய கல்வியில் மிக்க விருத்தியடைந்து வந்தனர். சென்னையிலுள்ளார் யாரும் மிக விரும்பி இவரைக் கொண்டாடி வந்தனர். இங்ஙன மிருந்துகொண் டிருக்கையில் ஷெ சொக்கலிங்க சிவப்பிரகாச பண்டாரசந்நிதிகள் திருத்துறையூரினின்றும் திருமயிலைக் குமாரதேவர் மடத்தி லெழுந்தருளியிருக்கையில் ஒருநாள் இவரைச் சந்தித்து இவரது வடிவத்தையும், வித்தையையும், புத்தியையும், யுக்தியையும், அடக்கத்தையும், சாமர்த்தி யத்தையும் கண்டு வியப்படைந்து இவரே தமது மடத்தில் தமக்குப் பின்னிருக்கத் தக்கமூர்த்தியெனத் தீர்மானித்து, தாம் துறையூரினுக்குச் சென்று தக்கவர்களைக்கொண்டு தந்திரமா யழைப்பித்து உபசரித்துத் தமது எண்ணத்தினைக் குறிப்பிக்க, அதற்குத் தான் சிறிது மிசையாதவராய்த் தான் தன்னந்தனியே யிருந்துகொண்டு சிவத்தல யாத்திரைசெய்து வருதலிலேயே இஷ்டமிருப்பதை தெரிவிக்கவும், அவர்பற்பல இனியமொழிகளைக்கூறி, இருக்கு மசந்தற்பங்களைமொழிந்து, தமது வயப்படுத்திச் சின்னபட்டங்கட்டித் திருத்துறையூரிலேயே யிருக்கச்செய்து வேண்டிய சௌகரியங்கள் பலவு மேற்படுத்தித் தாம் விருத்தாசலத்துக் குமாரதேவர்மடத்தி லிருந்துகொண்டிருந்தனர். சின்னப்பட்டத்துச் சந்நிதானம் நாளுக்குநாள் மடத்துப்பரிபாலனம் செய்துவரும் சாமர்த்தியத்தினையறிந்து மனத்திலேயே மகாசந்நிதானம் ஆனந்தங்கொண்டவரா யிருந்தனர். சிற்சில வாண்டுகளுக்குப்பின் மகாசந்நிதானம் ஐக்ய மடைய, இவர்தாமே அருகிலிருந்து கிரியைகளனைத்தையுமுடித்து அக்குருமூர்த்தி ஆஞ்ஞைப்படி மகாசந்நிதானமாக விருத்தாசலத்திலும், திருத்துறையூரிலு மிருந்துகொண்டு மடத்துப் பரிபாலனம் செய்துவருகின்றனர். அவ்வக் காலங்களில் சிற்சிலர் அசூயையால் மடத்துச் சம்பந்தமாக உண்டாக்கிய

பெரிய வழக்குகளையெல்லாம் இராஜாங்கமூலமாக நிவிர்த்தி செய்துகொண்டு, மடங்கட்கு வேண்டிய நிலங்களைப் புதுக்க வாங்கிச் சேர்த்தும், அனேக வருடங்களாகப் பிறர் கையாடிக் கொண்டிருந்த பூமியைத் திருப்பியும், நாளுக்குநாள் மேன் மேலும் விருத்திசெய்துகொண்டு வருகின்றனர். துறையூர்மடத்தினைக் கருங்கல் கட்டடமாகப் புதுப்பித்தனர். விருத்தாசலத்துக் குமாரதேவர் மடத்துத் திருவிழா மகாவைபவமாக நடத்திவருவதுடன் அதன்விருத்திக்கு இலட்சம் ரூபா பெறத்தக்க ஒரு வளப்பமான கிராமம்வாங்கி வைத்தனர். மடத்தினை விருத்திசெய்தலிலேயே மிக ஊக்கமுடையராய், அடுத்தாரிடத்து மிக அபிமானமாளமுடையராய், அரிய வித்துவான்களை யாதரிப்பவராய், கருணையே திருமேனியாகக்கொண்ட சிதம்பர சிவப்பிரகாச பண்டாரசந்நிதிகள் திடகாத்திரத்துடன் பல்லாண்டு வாழ்கவேண்டுமென எல்லாம் வல்ல முதல்வனைப் பிரார்த்திக்கின்றனம். சுபம்.

---



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தற்சிறப்புப்பாயிரம்.

## ஸ்ரீகுமாரதேவசுவாமிகளாதீனம்

## சந்தான குருபரம்பரை ஸ்துதி.

பதினான்குசீர்விருத்தம்.

புண்ணியன்கைலைக்குருபரம்பரையிற்
போந்தமெய்கண்டசந்ததியிற்
பொருவில்சீர்த்துறைசைநகர்வளர்
சிவப்பிரகாசர்தம்பொன்னடிபுனைந்த
எண்ணினற்றவத்துச்சாந்தலிங்கேச
னெல்லையின்மோனானந்தநிலையாம்
இரும்பொருளளித்தவிருத்தவம்பிகையச
ளின்புறுங்குமாரசத்குரவன்
திண்ணியவருள்சேர்சிதம்பரதேவன்
செப்புறும்பழனிமாமுனிவன்
திருவமராறுமுகன்குவாகத்தான்
செப்பும்வேலாயுதத்திறலோன்
கண்ணினுக்கிமையாங்குழந்தைவேலடியேன்
கருமலங்களைந்தமுத்தையன்
கருதுமிச்சந்தானக்குரவர்கடாட்
கமலமுண்ணினைந்துகைதொழுவாம்.

## குருஸ்துதி.

### கலிவிருத்தம்.

தத்துவச்சிரத்தாடிதெற்பரம்
இத்தலத்தெளியேன்பவமிற்றிட
உத்தமக்குருவாய்வந்துதித்தருள்
முத்தய்யன்பதமுன்னுதியுள்ளமே.

### அறுசீர்விருத்தம்.

பொன்னரங்கிற்புலியரவங்தொழப்புயங்கதாண்டவஞ்செய்
புனிதன்பொற்றாள்
என்னரங்கமிதையமதாயிருத்திமலவலிதீர்த்த
விசையானென்றன்
முன்னரங்கம்பொருளாவிகைக்கொளுமுத்தையனருண்
முதிர்வாலிந்தச்
சொன்னரந்தம்பெறுசுத்தசாதகநூற்குரைதுணிந்து
சொல்வாமன்றே.

---

## அவையடக்கம்.

### கலிவிருத்தம்.

ஒப்பிலாமுக்கணும்பனொருவனே
தப்பிலான்கவிக்கேகுற்றஞ்சாற்றினல்
துப்பிலேன்செய்துகளுரைத்தன்னையா
ரொப்புவார்மழலைச்சொல்லுவப்பர்போல்.

தற்சிறப்புப்பாயிரம் முற்றியது.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சுத்தசாதகம்

## மூலமும் உரையும்.

### பொதுப்பாயிரம்.

### பாதாளவிநாயகர்.

*அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.*

*சூதானமாயையோரைத்துதிக்கையாலெடுத்துமேலாம்*
*ஆதாரமானவந்தவருளினிலிருக்கவைக்குந்*
*தாதாவாய்விருத்தவெற்பிற்றங்கியேபிரகாசிக்கும்*
*பாதாளத்தானைபாதம்பணிந்துபோற்றிடுதல்செய்வாம்.*

**இதன்பொருள்.** சூதான-வஞ்சத்தன்மையை யுடைய,—மாயையோரை-மாயையின் வயத்தராயுள்ள ஆன்மாக்களை,—துதிக்கையால் - அத்தம் நாசி * என்று நிருவகிக்கக்கூடாது அத்வைதமாக விளங்குந்தனது தும்பிக்கையினால்,—எடுத்து - அம்மாயையினின்றும் எடுத்து,—ஆதாரமான - ஆதாரமாறை யுங்கடந்து விளங்கும்,—அந்தவருளினில் - நிராதாரமாகியவரு

---

* இவ்வுண்மையினை "ஆனைக்கைபோலபினவத்துவிதானந்தமாம்" எனவும், "ஆனைக்கைபோலே யிவருடம்பில்" எனவும்வரும் ஒழுவிலொடுக்கத்துப்பொதுவிலுபதேசத்தாலுங்காண்க.

ளில் தாதான்மியப்படுத்தி இருக்கவைக்கும்,—மீதானமாகிய சிவத்தோடு அத்வைதமாக நிலைபெற்றிருக்கவைக்கும்,—தாதாவாய் - அருள்வள்ளலாய்,—விருத்தவெற்பில் - விருத்தசைலமென்னும் புண்ணிய ஸ்தலத்தின்கண்,—தங்கியே பிரகாசிக்கும் - எழுந்தருளி விளங்கும்,—பாதாளத்தானை - ஆழத்துப் பிள்ளையாரென்னுங் காரணப்பெயர்பெற்ற யானைமுகத்தினையுடைய விநாயகக்கடவுளினது,—பாதம் - உபயசரணாரவிந்தங்களையும்,—பணிந்துபோற்றிடுதல் செய்வாம் - திரிகரணங்களாலுஞ் சிந்தித்து வணங்கித் துதிப்பாம் என்க.

**விசேஷார்த்தம்.** சூரியகிரணத்திற்றோன்றி அதனது அமிசமாகிய *கண்களுக்குச் சூரியனையுமறைத்து அதனது கிரணத்தையும் பிடித்துத்தடுத்துக் கீழிட்ட இருட்பதார்த்தங்களை விளக்கு மேகபடலம்போல, சிவத்தினிடத்திற்றோற்றி அச்சிவாம்சமாகிய † ஆன்மாக்களுக்குச் சிவத்தையுந் தெரியவொட்டாது மறைத்து அச்சிவசத்தியான திருவருள் விளக்கத்தையுந் தடுத்துத் தனது சங்கோச விகாச தரும சத்திசாமர்த்தியத்தாற் பொய்ப்பொருளாகிய பிரபஞ்சத்தை விரித்துங் குவித்து மதனையே மெய்ப்பொருளாகக் காட்டி ஆன்மாக்களையுமவைகட்குள்ளீடாய் நின்றுணர்த்துந் திருவருளையு மவைகட் காதாரமான சிவத்தையுந் தெரியவொட்டாது வஞ்சித்துணர்த்தலால் சூதானமாயை என்றார். ஏகமென்றும் இரண்டென்றும் நிருவகிக்கக்கூடாத சிவசீவ அயிக்கியாத்வைத மெய்ப்பொருளைப் புத்திகர்த்தாவாகிய விநாயகர் தன்னை யுபாசிக்

* சூரியனுக்குக் கண்வேறாயினும் முறையே பேரொளி சிற்றொளி வாய்ந்திருக்கும் ஒற்றுமை நோக்கிச் சூரியன் அமிசம் கண்ணென்றனர்.

† சிவத்திற்கு ஆன்மாவேறாயினும் முறையே பேரறிவு சிற்றறிவு ஒற்றுமை நோக்கிச் சிவாமிசம் ஆன்மா என்றனர்.

இன்ற அன்பர்களது ஆன்மஞானத்துக் குட்புறம்பாக நின்று தனதுதும்பிக்கைக் குறிப்பானே இற்றென்றுணர்ந்துதலால் "துதிக்கையாலெடுத்து மேலா மாதாரமான வந்தவருளினி லிருக்கவைக்கும்" என்முர். பாதாள வுலகமாகிய மூலாதாரத் தில் விநாயகர் வசித்தலால் பாதாளத்தானே என்முர். பாதம், மேற்பரடு, ஜானு, முழங்கால், ஊரு, குதம், கடிமத்தியம் ஆகிய விவைகளை நிறையே அதலம், விதலம், சுதலம், தரா தலம், ரசாதலம், மகாதலம், பாதாளவுலகமாகவும்; நாபி, வயறு, இதையம், கண்டம், புருவ மத்தியம், நெற்றி, சிரசு இவைகளை நிறையே பூலோகம், புவலோகம், சுவலோகம், மகாலோகம், ஜனலோகம், தபலோகம், சத்திய லோகமாக வும் ஆகமங்களிற் கூறியிருக்கின்றமையால், மூலாதாரத்தை பாதாளவுலகம் என்றது. எந்நூலுரைப்பினும் அந்நூற்குப் பாயிர முரைத்துரைக்க வேண்டுமென்ப திலக்கணம்.—"ஆயிர முகத்தா லகன்ற தாயினும் பாயிர மில்லது பனுவ லன்றே—" என்றலின், அப்பாயிரந்தான் தலையமைந்த யானைக்கு வினை யமைந்த பாகன்போல வழங்குதலின் பொதுப்பாயிரங் கூறப் பட்டது. இப்பாயிர மெல்லா நூன்முகத்து முரைக்கப்படு னவாம். இந்நூல் சொற்சுவை பொருட்சுவை அமைந்து இரா சீக தெய்வீகங்களால் இடையூறின்றி இனிது முடிதற்பொ ருட்டு முதற்கண் வழிபடுகடவுள் வணக்கங்கூறினர். க

பழமலைநாதர்.

எழுசீர் விருத்தம்.

அருமறையுச்சிதனில்விளங்குவதா
யணுதியாயமலன்மற்றமலை
இருவர்க்குநிகழ்ச்சியாயந்தவிறைவற்
கிதயமாயிலிங்கரூபமதாய்
ஒருகிரிவடிவாய்க்கொடுமுடியனந்த
முடைத்ததாயுலகெங்குநிறைவாய்த்

திருமுதுகிரியென்றொருபெயர்படைத்த
தேவைநாடோறுமிறைஞ்சிடுவோம்.

இ-ள். அருமறையுச்சிதனில் - விதிநிடேத சித்தார்த்தங் களையுணர்த்துமரிய வேதமுடிவின்கண், — விளங்குவதாய் - விளங்கும் பரவஸ்துவாகவும்,—அநாதியாய் - நித்தியவஸ்து வாகவும்,—அமலன் மற்றமலை - அணுபட்ச அனந்த தேவ ரான மயேசுரரை அதிட்டேய மாகவுடைய நிருமலரான சம்புபட்ச உமாமகேஸ்வராகிய,—இருவர்க்கு நிகழ்ச்சியாய் - அவ்விருவர்க்கும் வசிக்குமிடமாகவும்,—அந்தவிறைவற்கு-அக் கடவுளினது விராட்புருட வடிவத்திற்கு,—இதயமாய் - இருத யஸ்தானமாகவும்,—இலிங்கரூபமாய் - தத்துவமூர்த்திப் பிர பாவமான * கன்மசாதாக்கியரென்றும் இலிங்கமூர்த்தமாக வும்,—ஒருகிரிவடிவாய்-ஒப்பற்ற † மலைவடிவாய்,—கொடுமுடி யனந்தமுடைத்ததாய் - எண்ணிறந்த சிகரபந்திகளையுடைய தாய்,—உலகெங்கு நிறைவாய் - பிரமனது மனச்செருக்கை மாற்றற் பொருட்டுச் சுவர்க்கமத்திய பாதாளமாகிய மூவுலக முஞ்சேர்த் திரண்டோர்வடிவாய், — திருமுதுகிரியென்று - பழமலைநாதரென்கின்ற,—ஒரு பெயர்படைத்த - ஒரு திருநா மந்தரிக்கப்பெற்ற,—தேவை - கடவுளை,—நாடொறும் - சதா காலமும்,—இறைஞ்சிடுவாம் - வணங்குவாம் என்க. உ

---

* கன்ம சாதாக்கியமென்பது பஞ்ச சாதாக்கியத்திலொன்று. இது நிவர்த்தியாகிய கிரியாசத்தியிற்றோன்றிக் கன்மசாதாக்கிய மென்னுங் காரணப் பெயரையுடைத்தாய் நாதமயமான ஞானலிங்கமும், விந்துமயமான கிரியாபீடமுமாகிப் பஞ்சகிருத்திய முடையதாயிருக்கும். இதன்விரிவை அத்துவிதவெண்பா உண்மையதிகாரத்திற் காண்க.

† ஒரு காலத்தில் பிரமன் விருப்பத்தின்படி சிவபெருமான் இம்மலையினைப் பூமியிலழுத்திவிட்டபடியால் இக்காலத்தில் மலையில்லை. அத்தலபுராணத்திற்காண்க

பெரியநாயகியம்மன்.

மரகதவடிவுமதித்திருமுகமு
மலர்க்குழலுங்குறுநகையுங்
கரகமலமுங்கூர்விழியுஞ்செவ்வாயுங்
கச்சணிதனமுநூலிடையும்
அரகரவென்போர்க்களித்திடும்பதத்தோ
டஞ்சலென்றென்னெதிர்தோன்றி
உரகதியளித்தபெரியநாயகியை
யுளத்தினிலிருத்திவாழ்த்திடுவாம்.

இ-ள். மரகதவடிவும் - மரகத இரத்தினம்போலும் அழகியதிருமேனியும்,—மதித்திருமுகமும் - பூரணசந்திரனைப்போலும் பொலிவுடைத்தான திருமுகமும்,—மலர்க்குழலும்-திவ்ய பரிமள புட்பங்களையணிந்த கூந்தலும்,—குறுநகையும் - புன்முறுவலும்,—கரகமலமும் - தாமரைமலர்போன்ற திருவஸ்தங்களும்,—கூர்விழியும் - வேல்போலுங் கூர்மைபொருந்திய திருவிழிகளும்,—செவ்வாயும் - பவள வள்ளம்போன்ற திருவாயும்,—கச்சணி தனமும் - கச்சிறுக்கிய ஸ்தன்னியங்களும்,—நூலிடையும்-நூல்போலுஞ் சிறுத்தவிடையும்,—அரகரவென்போர்க்கு - அரநாம ஸ்மரணைவிட்டுநீங்காத மெய்யடியார்களுக்கு, — அளித்திடும் பதத்தோடு - அனுக்கிரகிக்காநின்ற ஸ்ரீபாதத்தோடும்,—அஞ்சலென்று-பயப்படாதேயென்று,—என்னெதிர்தோன்றி - இவ்வித திவ்யமங்கள திருவுருவத்தோடும் அடியேனெதிராக எழுந்தருளிவந்து, — உரகதியளித்த - எக்கதிக்குள்ளும் நற்கதியான ஞானமார்க்கத்தை உபதேசித்தருளிய,— பெரியநாயகியை - விருத்தாம்பிகையை, — உளத்தினிலிருத்தி - எனதுள்ளத்தின்கண் சிந்தித்து,—வாழ்த்திடுவாம் - துதிப்பாம் என்க. ௩

## வேண்டுகோள்.

பங்கயன்றிருமாற்கரியதோர்பரமன்
பங்கியேபெரியநாயகியே
சங்கைகளிலதாய்த்தடைகண்மற்றிலதாய்த்
தத்துவமசிக்கருத்தமதை
அங்கையினெல்லியெனவிளங்குவதா
யமலையேயுனக்கிதயமதாந்
துங்கநன்னெறியொன்றுளத்தினும்விளக்கித்
தொண்டனேன்வாக்கினுமுரையாய்.

இ-ள். பங்கயன்றிருமாற்கு - பிரமவிஷ்ணுக்களுக்கு, — அரியதோர் பரமன் - இத்தன்மையனென்று அறிதற்கரிய பரமேஸ்வரனது,—பங்கியே - வாமபாகத்தில் வசிக்கின்றவளே, பெரியநாயகியே - விருத்தாம்பிகையே,— சங்கைகளிலதாய் - அசம்பாவனை, விபரீதபாவனை, சம்சயபாவனை முதலிய சந்தேகங்களுக் கிடங்கொடாததாகவும், — தடைகண் மற்றிலதாய் - உட்சமயம் புறச்சமயம் முதலிய சமயிகளாற்செயுந் தடைகட் குட்படாததாகவும், — தத்துவமசிக் கருத்தமதை- தத்துவமசி மகாவாக்கியார்த்தத்தை, — அங்கையினெல்லியென - கரதலாமலகம்போல,— விளங்குவதாய் - அறிவிக்கத் தக்கதாகவும், — அமலையே - திருமலையே, — உனக்கிதயமதாம் - உனது அந்தரங்கமனோசம்மதமான,—துங்கநன்னெறியொன்று - பரிசுத்தமுள்ள ஒருமோட்சமார்க்கத்தை,—உளத்தினும் விளக்கி - எனது உள்ளத்தின்கணின்று விளக்குவதுமன்றி,—தொண்டனேன் - அடியேனுடைய,—வாக்கினுமுரையாய் - வாக்கினிடமாகவு நின்று அதனை சாஸ்திரமாகவுஞ் சொல்லவேண்டும் என்க. ச

வி-ம். ஆன்மாக்களது பக்குவத்துக்கீடாக வேதாகமங்களில் மோட்சமார்க்கங்கள் பலவாகக் கூறியிருக்கின்றமையால் அவற்றுள் உத்தம பக்குவர்க்குணர்த்தும் தனது அந்தரங்க

மனோசம்மதமான உத்தம மோட்ச மார்க்கமாதலால், துங்க நன்னெறி யொன்று என்றார். சீவன் முத்தர்களுக்குத் தான் பெற்றபேறு உலகம் பெறவேண்டுமென்னுங் கருணைக்கருத் தாதலால் தனக்குணர்த்துஞ் சிவானுபவத்தை உலோகோப காரமாய்ச் சாஸ்திரரூபமாக அடியேனுடைய வாக்கினிடமா கவுநின்று 'உரைப்பாய்' என்றார். (ரு)

## பிரசாதம்.

உலகிலெச்சமயங்களுமுரைத்திடுதற்
கொருவிரோதங்களுமின்றி
இலகுமச்சமயங்களுக்குமேலாகி
யிலங்கிடுமுபநிடநெறியை
அலகிலெம்மண்ணலருளியவகையுள்
ளகத்தினும்விளக்கிவாக்கினிலும்
குலவிடவுரைப்பேமென்றனள்விருத்தக்
குன்றினில்வாழ்பெரியநாயகியே.

இ-ள். உலகில் - இவ்வுலகத்தின்கண்,—எச்சமயங்களும் — சமய சித்தாந்திகளாலும்,—உரைத்திடுதற்கு - வாத, செற்ப, விதண்டை * ஏதுக்களாற் சங்கித்தற்கேதுவான,—ஒருவிரோதங்களுமின்றி - யாதொருவிரோதங்களுமில்லாமல்,—இலகுமச்சமயங்களுக்கு - வேதாகமாங்கீகாரமாகவிளங்கும் அச்சமய சித்தாந்தங்களுள்,—மேலாகியிலங்கிடும் - உத்கிருஷ்டமாக விளங்கும்,—உபநிடநெறியை - உபநிடதப் பிரதிபாதகமான மோட்ச மார்க்கத்தை,—அலகில் - நித்தியமாகவிளங்கும்,—

* வாதம் - உண்மையுணர்தல் வேட்கையோன் கதை. கதை யாவது கூறுவார் பலரையுடைத்தாய் சங்கையுத்தரங்களைப் பயக்கும் தொடர்மொழியின் கோவைப்பாடு. செற்பம் - சாத னமிரண்டுற்ற தன் கண்வெல்லும் வேட்கையோன் கதை. விதண்டை - தன் கோட்பாட்டை நிலைபெறுத்தாக்கதை. மற்று மிவற்றின் விரிவைத் தருக்கசோபானமெனுநூலிற்காண்க.

எம்மண்ணல் - எமது பரமேஶ்வரன்,—அருளியவகை - எனக்குபதேசித்தருளிய கிரமப்படி,—உள்ளகத்தினும் விளக்கி - உன்னறிவினிடமாகவுமுணர்த்தி,—வாக்கினிலும் - உன்வாக்கினிடமாகவுநின்று,—நுலவிடவுரைப்போம் - யாவருக்கும் எளிதேவிளங்கும்படி சாஸ்திரரூபமாகவுஞ் சொல்லுகின்றோம்,—என்றனள் - என்றனுக்கிரகித்தாள்,—விருத்தக்குன்றில்வாழ் - விருத்தசைலமென்னும் புண்ணியஸ்தலத்திலெழுந்தருளிவிளங்கும்,—பெரியநாயகியே - விருத்தாம்பிகையானவள் என்க.

வி - ம். சாமவேதமுடிவிற்சொல்லும் தத்துவமசி மகாவாக்கியானுசார உபநிடதப் பிரதிபாதகமாகிய சுத்தமார்க்கத்தைச் சிவபெருமான் ஓர்கால் உமாதேவியாருக்கு வடவாமுகாக்கினி மண்டபத்தினிடத்து நிற்சங்கமாக எழுந்தருளியிருந்து உபதேசித்திருத்தலின் ‘அலகிலெம்மண்ணலருளியவகை’ என்றார். இதனை :— “சீர்மருவு சச்சிதா னந்தமாகித் திகழ்ந்தழியாப் பூரணமாய் நிரஞ்சனத்தொண் பொருளாய்ப்,—பேர்செறியும் பரஞ்சோதி ரூபமாகிப் பிறங்குபரமேசன் முளங்கடலி நாப்பண்—, ஆர்வமொடு வடவையழல் மண்டபத்தேயாரூருந் தத்துவத்தி னதீதமாகி—, நேரகன்முப் பிரணவங்களொன்றுகூடி நின்ற பிரணவபீடத் திருந்தானன்றே” எனவும் “இருந்தநின் பொருளே யாகு மிலிங்காங்க சம்பந்தத்தின்—, அருந்திற முபநியாச வாரியந் தனிலீ ராறுய்ப்—, பொருந்துமா கோடியாப்பிற் போதித்தா னுமைதனக்குப்—, பாரந்தவந் நூற்கு நாமம் பரமரா சியமே யாமால்.” எனவும் தத்துவப்பிரகாசத்தில் வருதல் காண்க. இவ்வாசிரியருக்கு அம்பாள் புறம்பே முன்னிலைவடிவாக எழுந்தருளிநின்று உண்மைஞானத்தைப் பரோட்சமாகவும், பின்பு பொற்கிண்ணத்தினிடமாய்த் தனது திருவத்தத்தினிடமாகக் கொண்டு வந்த ஞானப்பாலைப் புகட்டித் தன்மைவடிவாக அவரதுள்ளத்திற் பிரவேசித்து நின்று அபரோட்சமாகவும், பின்பு

படர்க்கை வடிவான சாஸ்திரரூபமாக அவரதுவாக்கினிடமாக நின்றுணர்த்த வுணர்ந்து கூறினமையால் 'உள்ளகத்தினும் விளக்கி வாக்கினிலுங் குலவிட வுரைப்பேம்என்றனள்' என்றார். இதனானே இக்குருபரம்பரை சைலயபரம்பரை என்பதுவிளங்குகின்றது· கூ

வரலாறு.

பெரியநாயகிதற்கருணையாலிங்குப்
பிராரத்தமுமொழிந்தோர்க்குத்
திரிவதாமாயாவடிவதுகரைந்து
திருவருளேவடைவாக
அரியவாஞ்சாமத்தசியுரைப்படியே
யமைத்திந்தச்சுத்தசாதகத்தைத்
தெரிவிலாவெளியேன்வாக்கினுணின்று
திருவுளம்பற்றியதிதுவே

இ-ள். இங்கு - இவ்வுலகத்தின்கண் ணிம்மாயா தேகத்தோடு சஞ்சரிக்கும்போதே,—பிராரத்தமும் - பிராரத்த சஞ்சித வாகாமியமாகிய முக்கன்மங்களும்,— ஒழிந்தோர்க்கு - நீங்கிய சீவன்முத்தர்களுக்கு,—திரிவதாம் - புத்தியை மாறுபடுத்தும்,— மாயாவடிவது - இம்மாயாவுருவமானது,—கரைந்து - கரைந்து,— திருவருள்-திருவருளாய்,—வடிவாகி - அவ்வருள் சிவத்துக்கங்கமாக விளங்கும் பொருட்டு,—அரியவாஞ்சாமத்து - சிறந்த சாமவேதத்திற்சொல்லும்,— அசியுரைப்படியே - தத்துவமசி மகாவாக்கியார்த்தப்படி,—அமைத்து - அம்மகாவாக்கியப்பிரதி பாதகமான பிரமஜாபால முதலிய உபநிடதத்திற்கூறுஞ் சிவாத்வைதமாகிய சுத்தமார்க்கத்தைச் சேர்த்து,—இந்தச் சுத்தசாதகத்தை - சுத்தசாதகமென்னும் இந்நூலை,—பெரியநாயகிதற்கருணையால் - ஸ்ரீமத்பெரியநாயகி தனது கிருபை மேலீட்டினால்,—தெரிவிலா - அறிவில்லாதவனாகிய,—எளியேன் வாக்கினுணின்று - அடியேனுடைய வாக்கி

விடமாக நின்று,—திருவுளம் பற்றியது - சொல்லியது,— இதுவே - சுத்தசாதகமென்னும் இந்நூலேயாம் என்க.

வி - ம். 'பிராரத்தமும்' என்ற எச்சவும்மையால் ஆகாமிய சஞ்சிதம் ஆகிய இரண்டும் வருவிக்கப்பட்டது. 'ஒழிந்தோர்க்கு' என்றதனால் ஆகாமிய முதலிய முக்கன்மங்களு நீங்கிய சீவன் முத்தனே இந்நூலுக்கதிகாரியும், மாயாவடிவது கரைந்து, என்றதனால் விஷயமும், 'அருளேவடிவாக' என்றதனால் பிரயோசனமும், சாமத்தசியுரைப்படியே யமைத்து என்றதனால் சம்பந்தமும் ஆகிய அனுபந்த சதுட்டயமுங் கூறப்பட்டது. 'எம்மண்ணலருளியவகை யுன்னகத்தினும் விளக்கி வாக்கினிலுங் குலவிடவுரைப்பேம்' என்றதனால் "வினையி னீங்கி விளங்கிய வறிவின்—முனைவன்கண்டது முதனூலாகும்" என்றும் இலக்கணவிதிப்படி தத்துவமசிமகாவாக்கியார்த்தமான சுத்தமார்க்கத்தைப் பிரதிபாதிக்கின்ற பிரமஜாபால உபநிடதமே இந்நூலுக்கு முதநூலென்பதாயிற்று. அதனால் இந்நூல் வழிநூலென்பது விளங்குகின்றது. 'தெரிவிலாவெளியேன்' என்றதனால் அவையடக்கமும் இந்தச் சுத்தசாதகத்தை என்றதனால்நூற்பெயருங் கூறுவாருமாயிற்று.

யாதாமொரு நூற்குப் பொருளுணாக்குங்கால் காண்டிகை வகையானும் உரைவகையானு முரைக்கப்பெறும். ஈண்டிந்நூற்குக் கூறியதியாதெனில்:—"சூத்திரத் துட்பொரு ளன்றி யுமியாப்பின் இன்றி யமையாதியல்பவை யெல்லா—மொன்ற வுரைத்த லுரையெனப் படுமே." என்னுஞ் சூத்திரவிதிப்படி இவை உரைவகையென்று சொல்லப்படும். இவைக்கங்கமாவன. "பொழிப்பே யகல நுட்பமெச்ச—மென்றப்பா ணுன்கே யுரைக்குறுப் பாகும். எனவும், பொழிப்பே பொருளை யொருப்படுத்துரைத்தல்—விரித்துரை தானே யகலமென்ப—நுட்பமப்பொருட்கேற்ப வுணர்த்தல். அடுத்த பொருளா யகன்று நிற்பதனை யெடுத்துரைப் பதுவே யெச்சமாகும் எனவும்

வருதல்சூாண்க" ஈண்டு பொழிப்பென்பது தொகுத்துணர்த்தல், அகலமென்பது விரித்துணர்த்தல் நுட்பமென்பது கடாவிடைகூறல், எச்சமென்பது கடாவறத்துணித்த பொருள், இவ்விலக்கண வமைதியைத்தழுவி இந்நூற் குரையெழுதப்பட்டது. எ

## பொதுப்பாயிரம் முற்றிற்று.

---

## நூல்.

ஈசனதுரையுங்கிரியையதென்று
மியம்பிடுமுபாசனையென்றும்
பாசமதகன்றசுத்தமதென்றும்
பகர்ந்திடுமூன்றுகாண்டமதாம்
நேசநற்கிரியைசைவம்வைதீக
நிகழ்ந்திடுமுபாசனைசுத்தம்
ஆசில்சிவாத்துவிதமிவைமூன்று
மடங்கிடுந்தத்துவமசியே.

இ - ள். ஈசனதுரையும்-பரமேஶ்வரனாற் சொலலப்பட்ட திருவாக்கானது,—கிரியையதென்றும் - கிரியா காண்டமென்றும்,—இயம்பிடும் - சொல்லப்பட்ட,— உபாசனையென்றும் - உபாசன காண்டமென்றும், பாசமதகன்ற - பந்தநீங்கிய,—சுத்தமதென்றும்-சுத்தகாண்ட மென்றும்,—பகர்ந்திடு மூன்று காண்டமதாம் - திரிவிதகாண்டங்களாகச் சொல்லப்படும்,—நேசநற்கிரியை - யாவரும் இச்சிக்கத்தக்க கிரியாகாண்டமானது,—சைவம் - சைவசிந்தாந்த * மார்க்கத்தைப் பிரதிபாதிக்கும்,—வைதிக நிகழ்ந்திடு முபாசனை - உபாசனகாண்டமானது வைதிகமார்க்கத்தைப் பிரதிபாதிக்கும்,—சுத்தம் - சுத்

---

* ஈண்டு சைவசித்தாந்த மென்றது சுத்தாத்துவித சித்தாந்தத்தினை யன்று அகச்சமயமாறனு ளொன்றனை.

தகாண்டமானது,—ஆசில் சிவாத்து விதம் - குற்றமற்ற சிவாத்வைத மார்க்கத்தைப் பிரதிபாதிக்கும்,—இவை மூன்றும் - இம்மூவித மார்க்கங்களும்,—அடங்கிடுந் தத்துவமசியே - தத்துவமசியென்னு மகாவாக்கியத்துள் அடங்கும் என்க.

வி-ம். சிருட்டிகாலத்துச் சிவபெருமான் பிரணவர் முதலிய அணுசதாசிவர்களுக்கு காமிகமுதலிய உஅ - திவ்யாகமங்களையும், பயிலர் முதலிய இருடிகளுக்கு இருக்காதி நான்குவேதங்களையும், தனது ஈசானாதி பஞ்சவதனங்களி னிடமாகச் சிருட்டித்த திறவையவன் முதலிய மூர்த்திகள் ஐவருக்கும் ஸ்ரீருத்திர முதலிய முப்பத்திரண்டு உபநிடதங்களையும் கிரியாகாண்டம், உபாசனகாண்டம், சுத்தகாண்டமாகப் பிரித்தனுக்கிரகித் திருக்கின்றமையால் ஆகம வேத உபநிடதங்களை 'ஈசனதுரை' என்றார். அணுசதாசிவர்களாவன:—பிரணவர், சுதர்க்கியர், தீர்த்தர், காரணர், சுசிலர், ஈசர், சூக்குமர், காலர், தேகேஸ்வரர், அம்சு. ஆ - க0. இருடிகளாவன:—பயிலர் வைசம்பாயனர், சைமுனி, சுமந்து ஆ ச. மூர்த்திகளாவன:—திறவையவன், ருத்திரன், மஹேஸ்வரன். ஈசுரன், சதாசிவன், ஆ - ரு. க

கிரியையினெறியையிலங்கிடவியம்புங்
கிளர்தந்திரம்மெழுநான்கும்
அரியநல்லுபாசனநெறியதனை
யறைந்திடுமறையொருநான்கும்
உரியவச்சுத்தநெறியினையுரைக்கு
முபநிடச்சுருதியெண்ணான்கும்
கிரியைதொம்பதந்தற்பதமுபாசனையக்
கேடில்சுத்தம்மசிபதமே.

இ-ள். கிரியையி னெறியை - கிரியாமார்க்கத்தை,—இலங்கிட வியம்பும் - விளங்க எடுத்துச்சொல்லும், — கிளர்தந்திர மெழுநான்கும் - காமிகமுதலான இருபத்தெட்டு திவ்யாகமங்

களும்,—அரியநல்லு பாசனநெறியதனை-அரிதாகிய நல்ல உபாசனமார்க்கத்தை,—அறைந்திடு மறையொரு நான்கும் - எடுத்துச்சொல்லும் ஒப்பற்ற இருக்காதி நான்குவேதங்களும்,—உரியவச்சுத்த நெறியினை யுரைக்கும் - நித்திய முத்திக்குரிய சுத்தமார்க்கத்தை யெடுத்துச் சொல்லும்,—உபநிடச்சுருதி எண்ணான்கும் - ஸ்ரீருத்திர முதலிய முப்பத்திரண்டு உபநிடதங்களும்,—கிரியை தொம்பதம் - கிரியாமார்க்கமானது துவம் என்னும் பதத்தினும்,—தற்பத முபாசனை - உபாசன மார்க்கமானது தத் என்னும் பதத்தினும்,—அக்கேடில் சுத்தம் அசிபதமே - கெடுதலின்றிய அச்சுத்தமார்க்கமானது அசி என்னும் பதத்தினுமடங்கும் என்க. உ

இருக்குமுன்னான்கின்முடிவிலெண்ணான்கா
யிலங்கிடுமுபநிடமவையே
வருக்கமுமிரண்டாம்பூருவமென்றும்
வயங்கிடுமுத்தரமென்றும்
சுருக்கமதின்றியத்தியான்மீகஞ்
சொற்றிடும்பூருவபாகந்
திருக்குகளின்றியங்கலிங்கையிக்கஞ்
செப்பிடுமுத்தரபாகம்.

இ - ள். இருக்கு முன்னான்கின் முடிவில் - இருக்கு முதலிய நான்கு வேதமுடிவின்கண்,—எண்ணான்கா யிலங்கிடு முபநிடம் - ஒவ்வொரு வேதமுடிவில் எவ்வெட்டாக விளங்கு முப்பத்திரண்டு உபநிடதங்கள்,— அவை - அவ்வேதங்களும் உபநிடதங்களும்,—பூருவமென்றும் - பூருவபாகமென்றும்—உத்தரபாகமென்றும் வருக்கமு மிரண்டாம் - இரண்டிரண்டு பிரிவாக,—வயங்கிடும் - விளங்கியிருக்கும்,— பூருவபாகம்-பூருவபாகத்தில்,— சுருக்கமதின்றி - பிரபலமாக, — அத்தியான்மீகம் - அத்தியாத்மீகப் பிரமத்தை,—சொற்றிடும் - சொல்

லும்,—இருக்குகளின்றி - யாதொரு விரோதங்களுமின்றி,— உத்தரபாகம் - உத்தரபாகத்தில் அங்கலிங்கயிக்கியமாகிய சிவாத்வைதத்தை, — செப்பிடும் - பிரபலமாக வெடுத்துச் சொல்லும் என்க.

வி - ம். இருக்குவேதம் உக-பேதம். அவற்றின் முடிவில் ஸ்ரீருத்திரமுதல் பிரமம் வரையில் உபநிஷத்து அ. எசுர் வேதம் க0க - பேதம். அவற்றின் முடிவில் நாராயணமுதல் பகுவபஞ்சம் வரையில் உபநிஷத்து அ - சாமவேதம் சகஸ் திரபேதம். அவற்றின் முடிவில் பிரமஜாபாலமுதல் சௌகியம் வரையில் உபநிஷத்து அ. அதர்வணவேதம், ரு - பேதம். அவற்றின் முடிவில் சிவசங்கற்பமுதல் மௌண்டிரம் வரையில் உபநிஷத்து அ. ஆக உபநிஷத்து ௩உ. ௩

முத்தியாமிடத்தின்மும்முதலென்றே
மொழியுமாகமமுமங்கொன்றும்
அத்தியான்மீகமறையுபநிடமு
மவனியில்வழக்கமேயன்றிப்
பத்தியாலடையுமங்கலிங்கயிக்கம்
பகர்ந்திடுமுபநிடமின்றும்
அத்தினலிவையிலடக்கமதென்ப
ரதைவிளக்கிடுந்தொத்தசிவே.

இ - ள். முத்தியாமிடத்தில் - மோக்ஷதிசைக்கண்,— மும்முதலென்றே - பதிபசுபாசங்கள் தனித்தனி மூன்று முதலாகவே யிருக்குமென்று,—மொழியு மாகமமும் - சொல்லுமாகமங்களும்,—அங்கு - அம்மோக்ஷ திசைக்கண்,—ஒன்று மத்தியான்மீகம் - அத்தியாத்மீகப்பிரமமொன்றே என்றுசொல்லும்,—மறை - பூருவ்பாக வேதங்களும்,—உபநிடதம் - பூருவபாக உபநிடதங்களும்,—அவனியில் வழக்கமேயன்றி - உலகத்தில் வெளிப்படையாக வழங்கி வருகின்றதே யல்லது,—

பத்தியாலடையும் - விசுவாசித்தடையத்தக்க,— அங்கலிங்கயிக்கம் - சிவாத்வைதமான அங்கலிங்கயிக்கத்தை,—பகர்ந்திடும் — சொல்லப்பட்ட,—உபநிடம் - உத்தரபாக உபநிடதமானது,— இன்றும் - உலகத்தில் வெளிப்படையாக வழங்குதலில்லையாம், —அத்திறல் - அதனல்,—இவையில்-இப்பூருவபாக உபநிடதத்தில்,—அடக்கமதென்பர் - அவையடங்கியிருக்கின்றதென்று சொல்லுவார்கள்,—அதை - அவ்வுத்தரபாக உபநிடத சித்தாந்தத்தை, — விளக்கிடும் - தெளிவாக எடுத்துச்சொல்லும்,— தொந்தத்தசியே - தத்துவமசி யென்னு மகாவாக்கியமானது, என்க.

பூருவபாக ஆகம வேதவுபநிடதங்களுக்கு: —"ஏகனனேகனிருள்கரும மாயை யிரண்டாகவிவையாறுதியில்." — "இற்றுப்பலசே ரொருகற்போற் கிளருஞ்சகங்கள் செறிபிரமந் — தோற்றப்படுமா லிரண்டென்னத் துடர்காரணம் வேறிலாமையினல் - ஆற்றச்சகமென் றென்றில்லை', என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

ச

சைவநன்னெறியுந்தந்திரமவையுந்
    தற்பரன்முகத்தினின்றுதிக்கும்
துய்யவைதிகமுமறையதுவுஞ்சுவாச
    மற்றதனினின்றுதிக்கும்
உய்யுமச்சிவாத்துவித நெறியதுவு
    முபநிடமு முளத்துதிக்கும்
ஐயமுந்திரிவுமறவிவைக்கருத்த
    மறைந்திடுந்தத்துவமசியே.

இ - ள். சைவ நன்னெறியும் - சிவசம்பந்தமான கிரியா மார்க்கத்தைச் சொல்லும்,—தந்திரமவையும் - காமிகாதியிருபத்தெட்டு சிவாகமங்களும், — தற்பரன் முகத்தினின்றுதிக்கும் - சிவபெருமானுடைய ஈசானுதி ஐந்துதிருமுகத்தினின்றுந்

தோற்றும்,—துய்யவைதிகமும் - பரிசுத்தமுள்ள வைதீகமென்னுமுபாசனு மார்க்கத்தைச் சொல்லும்,—மறையதுவும்-இருக்காதி நான்கு வேதங்களும்,—சுவாசமற்றதனின் றுதிக்கும் - சுவாசத்தினின்றுந் தோன்றும், — உய்யும் - பிழைத்தலைச் செய்,—சிவாத்துவித நெறியதுவும் - சிவாத்வைதமாகிய சுத்தமார்க்கத்தைச் சொல்லும்,—உபநிடமும் - ஸ்ரீருத்திர முதலிய முப்பத்திரண்டு உபநிடதங்களும்,—உளத்துதிக்கும் - உள்ளத்தினின்றுந் தோற்றும்,—இவைக்கு - இக்கிரியை உபாசனை சுத்தமென்னு மூவித மார்க்கங்களுக்கும்,—ஐயமுந்திரிவுமற - சந்தேக விபரீதமுமின்றி, — தத்துவமசியே - தத்துவமசி என்னு மகாவாக்கியமே, — அருத்தமறைந்திடும் - பொருள் சொல்லும் என்க.

வி - ம். காமிகாகமமுதல் அசிதாகமம் வரையில் ஐந்தும் சத்தியோசாதமுகம். தீப்த்தாகமமுதல் சுப்பிரபேதாகமம் வரையில் ஐந்தும் வாமதேவமுகம். விசையாகம முதல் வீராகமம் வரையில் ஐந்தும் அகோரமுகம். ரௌரவாகமமுதல் விம்பாகமம் வரையில் ஐந்தும் தற்புருடமுகம். புரோற்கீதாகமமுதல் வாதுளாகமம் வரையில் அ—ம் ஈசானமுகத்திலும் தோற்றும். (ரு)

ஆகமமிருபத்தெட்டினின்முடிவா
மாகமம்மாதுளமதனில்
ஏகமென்றியம்புமறையனுசரித்தே
யியம்பிடுநான்மறையவையிற்
பாகமதாறுஞ்சாமத்தின்முன்னெறியும்
பகர்சிவாத்துவிதவின்னெறியும்
யூகமதிலங்கவியம்பிடுமதனு
லுண்மைசாமத்தினின்முடிவே.

இ-ள். ஆகமமிருபத்தெட்டினில் - சிவாகமங்கள் இருபத்தெட்டுக்குள்ளே,—முடிவாமாகமம் - முடிவிற்சொல்லிய வாக

மமானது,—வாதுளம் - வாதுளாகமமாம்,—அதனில் - அவ் வாதுளாகமத்தில்,— ஏகமென்றியம்பும் - ஏகமேவாத்வைத மென்று பிரதிபாதிக்கின்ற,—மறையனுசரித்தே - வேதார்த் தத்தைத்தழுவியே,— இயம்பிடும் - சொல்லப்படும்,— நான் மறை யவையில்-அந்நான்கு வேதங்களுக்குள்,—பாகமதுறுஞ் சாமத்தில் - ஒழுக்கமுள்ள சாமவேதத்தில்,—முன்னெறியும் - முதற்சொல்லிய உபாசனா மார்க்கத்தையும்,— பகர்சிவாத்து வித - சிவாத்வைதத்தைச் சொலும்,—இந்நெறியும் - இச்சுத்த மார்க்கத்தையும்,—யூகமதிலங்க-விளங்கத்தக்கயுக்தியோடு,— இயம்பிடுமதனால் - சொல்லாநின்ற படியால்,—சாமத்தின்மு டிவே - சாமவேதத்தின்முடிவே,— உண்மைப் பொருளாம் என்க.

வி - ம். ஏகமென்றியம்பு மறையனுசரித்தே யியம்பிடும் என்பதற்கு, "ஜீவசிவஹ சிவோஜீவஹ, ஜீவகேவலஞ்சிவஹ, பாசபந்தபவோ ஜீவஹ, பாசமுக்தோ சதாசிவஹ" என வருதல் காண்க. "ஏகனுற்றருள் காமிகமேமுத, லாகமத்தி னைந்திடு முத்தர, பாகமுற்றும் பகர்வீரசைவமாஞ், சோக முற்றுயர்தொன்மதந் தோன்றுமால்" மற்றும் வருவனவற்றுற் காண்க. வாதுளாகமமானது, ௧௨ - பேதம், அவையாவன, வாதுளம், உத்தரவாதுளம், காலக்கியானம், பிரலோகிதம், சர்வம், சர்வாஷ்டம், சிரோஷ்டம், நித்தியம், சுத்தம், மகா ளாந்தம், விசுவாசம், விசுவாத்மகம் என்பனவாம். இவைலக்ஷங் கிரந்தமாக விருக்கும், இவை உபதேசிக்கப் பெற்றவர்கள் சிவ ருத்திரன் மகாகாளன் என்பவர்களாம். ௬

பந்தமதகன்றுசுத்தமாயிருத்தல்
பரமமாமுத்தியதென்றும்
அந்தநல்லதிட்டானம்மதுதானே
யாகுதன்முத்தியதென்றும்

நந்தலில்சிவத்துக்கங்கமாயிருத்த
னன்குறுமுத்தியதென்றும்
தந்திரமாதிமூன்றுகாண்டமதுஞ்
சாற்றுந்தாற்பரியநீகேட்பாய்.

இ - ள். பந்தம தகன்று - ஆணவாதி பஞ்சபாசகாரியங்க ணீங்கி,—சுத்தமாயிருத்தல் - சுத்தான்மாவாய் அப்பிற்கலத் தவுப்புப்போ * லிருத்தலே,—பரமமா முத்திய தென்றும் - மேலான மோக்ஷமென்றும், அந்த நல்ல திட்டானம் - அந்த சிவசாட்சியாகிய கூடஸ்தனும்,—அது - ஈசுரசாட்சியாகியபிர மமும்,—தானே யாகுதல் - அயிக்கியமான சர்வசாட்சியாக விளங்கியிருத்தலே, முத்திய தென்றும் - மோக்ஷமென்றும், நந்தலில் சிவத்துக்கு - கெடுதலின்றிய சிவலிங்கத்துக்கு,—அங் கமாயிருத்தல் - அங்கமாயிருத்தலே,—நன்குறு முத்திய தென் றும் - நன்மை பொருந்திய மோக்ஷமென்றும்,—தந்திரமாதி - ஆகமவேத வுபநிடதங்களாகிய,— மூன்றுகாண்டமதும் - கிரி யை, உபாசனை, ஞானமென்னு மூவித காண்டங்களும்,—சாற் றுந்தாற்பரியம் - சொல்லுகின்ற கருத்தை,—நீ கேட்பாய் - பிரித்தெடுத்துச் சொல்வோம் நீகேட்பாயாக என்க. எ

பந்தமதுறுமான்மாவையேநோக்கிப்
பந்தநீங்குதன்முத்தியென்றும்
அந்தநற்சுத்தான்மாவையேநோக்கி
வவ்வதிட்டானநீயென்றும்

* நீரோடுசேர்ந்த உப்புத் தன் சுவைமுழுதும் அந்நீர்க் காக்கித் தன்னோடொப்பத் சமன்செய்து நிற்கும். அதுபோல, விரும்பி உயிரைச்சேர்ந்த விறைவனும் தனக்குரிய எண்குணங் களையும் அவ்வுயிரின்கட் பதிப்பித்துத் தன்னோடொப்பச் செய்து நிற்பனென்பதாம்.

நந்தலில்பாமானவனையேநோக்கி
நற்சிவத்தங்கநீயென்றும்
தந்திரமாதிமூன்றுகாண்டமதுஞ்
சாற்றிடுமிவைதொந்தத்தசியே.

இ - ள். பந்தமதுறு மான்மாவையே நோக்கி - ஆகமங்களா னவை ஆணவாதிபஞ்சபாசங்களாற் பந்திக்கப்பட்டுள்ள அசுத் தசீவனைப்பார்த்து,—பந்தநீங்குதன் முத்தியென்றும் - அப்பந் தங்கணீங்கி சுத்தான் மாவாயிருத்தலே மோட்சமென்றும்,— அந்த நற்சுத்தான்மாவையே நோக்கி - வேதங்களானவை அச்சுத்தான் மாவான கூடஸ்தனைப்பார்த்து,—அவ்வதிஷ்ட் டான நீ யென்றும் - நீயே அவ்வீசுரசாட்சியான பிரமமாகிய வருளென்றும்,—நந்தலில் பரமானவனையே நோக்கி - உபநிட தங்களானவை பிரமமான அருளைப்பார்த்து,—நற்சிவத்தங்க நீயென்றும் - நீயே நன்மைபொருந்திய சர்வசாட்சியான சிவ மாகிய இலிங்கத்துக்கு அங்கமென்றும்,—தந்திரமாதி - ஆகம வேத வுபநிடதங்களான,— மூன்றுகாண்டமதும்-கிரியாகாண் டம், உபாசனுகாண்டம், சுத்தகாண்ட மென்னு முக்காண்டங் களும்,—சாற்றிடும் - சொல்லும்,—இவை - இம்மூவிதகாண்ட சித்தாந்தங்களும்,—தொந்தத்தசியே - தொந்தத்தசியென்னு மகாவாக்கியத்து ளடங்கும் என்க. அ

முன்பதசிருட்டிபதிபசுபாச
மூன்றையுமனுதியாய்நிறுவும்
பின்பதசிருட்டிசகமித்தையந்தப்
பிரமமேயுளதெனநிறுவும்
சின்பதமானவசிபதசிருட்டி
சிவசத்திலீலையாய்நிறுவும்
மன்பதமூன்றும்பின்னையபின்னையு
மாசறுசிவையுமென்றுணர்வாய்.

இ - ள். முன்பத சிருட்டி-முதற்பதமான தொம்பத வுற்பவமானது,—பதிபசுபாசம் - பதிபசுபாச மென்னும்,—மூன்றையும் - திரிபதார்த்தங்களையும்,—அநாதியாய் நிறவும்- அநாதிநித்தியமாகப் பிரதிபாதிக்கும்,—பின்பத சிருட்டி - இரண்டாம்பதமான தற்பத வுற்பவமானது,—சகமித்தை - நாமரூபாகாரமான பிரவஞ்சமனைத்தும் பொய்,—அந்தப்பிரமமே - சர்வசாட்சியான பிரமமொன்றுமே,—உளதென நிறவும் - உண்மைப் பொருளென்று பிரதிபாதிக்கும்,—சின்பதமான - சித்துப்பதமாகிய,—அசிபத சிருட்டி - அசிபதவுற்பவமானது, சிவசத்திலீலையாய் நிறவும் - சீவேஸ்வர சகத்தைச்சிவசத்தியினது லீலாவிநோதமென்று பிரதிபாதிக்கும்,—மன்பத மூன்றும் - நிலைபெற்ற தத்துவமசி யென்னு மூன்று பதங்களின் சிருட்டியும்,—பின்னை-பின்னுசத்தியினுலும்,—அபின்னை-அபின்னுசத்தியினுலும்,—மாசறு சிவையும் - நின்மலமான சிவசத்தியினுலும்,—என்றுணர்வாய் - உண்டானதென் றறிவாயாக.

வி-ம். முன்பத சிருட்டிக்கு, உ-ம். சிவ ஞானதீபம், "முத்தியினுமும்முதலு மழியாதென்றே மொழிந்திடுமாகமமதனை மொழியக்கேணீ, நித்தியமாம் பரபோகந் துய்ப்பதான்மாநீடு பரபோக முயிர்க்களிப்பனீசன், சுத்தமல மின்பமிக விளைக்குமாற்றாற் சொல்லரிய மும்முதலு மநாதியாகும்." பின்பதசிருட்டிக்கு. உ - ம். தயாநிதிப்பதிகம். "பழுதையேபாம்பாம் விவர்தம்பாலே தயிராம்பரிணமம், பகரின் பிதாவின்வீரியமே பாலனுகுமாரம்பம், வழுவில்கடலினுரை குமிழ்வரு முற்பத்தியிவைநான்கும், மருவுமதிட்டானத்தை யல்லால், வரல்வேறொன்றில்லாததுபோல், தழைவாம் பிரமசொரூபத்தைத் தவிரவுருவநாமசராசர, சரப்பிரபஞ்சமிலைத்தானேதானும் பேதந்தனைநீக்கிச், செழியச்சொரூபமாயிரெனச் செப்பாதுரைத்துவீடு தருந், தேவேதிருப்பா திரிப்புலியூர் சிவசண்முக தயாநிதியே, என்பது காண்க. அசிபத சிருட்டிக்கு, உ - ம். பெருந்தி

ரட்டு. "அனுதிசிவன் சத்தி சகத்தா ரு யிருமாகத், தனுதரு வைத்தானே படுத்துத் - தனுலொழிய, பேறிழவில்லைப் பெறு வானு மீவானும், வேறில்லை யென்றறிகைவீடு." மற்றும் வரு வனவற்றுற்காண்க. ௬

முன்பதமான தொம்பதப்பசுவே
மூடிருணீங்கிச்சுத்தமதாய்ப்
பின்பதமானதற்பதவருளிற்
பிறங்குந்தாதான்மியமடைந்தே
சின்பதமானவசிபதசிவத்தைச்
சேர்ந்ததற்கங்கமாய்நின்றுல்
மன்பதமுத்திமுடிந்ததுவாகு
மற்றவைதனினிற்கிற்குறையே.

இ - ள். முன்பதமான - முதற்பத மாகிய,—தொம்பதப் பசுவே - தொம்பதார்த்தமான அசுத்த சீவனே,—மூடிரு ணீங்கி - தனது ஞானசத்தியை மறைத்த ஆணவமலகாரியங்க ணீங்கி,—சுத்தமதாய் - சுத்தான்மாவாய்,—பின்பதமான - இரண்டாம்பதமாகிய,—தற்பதவருளில் - தற்பதார்த்தமாகிய வருளில், பிறங்குந்தாதான்மிய மடைந்து - விளங்கா நின்ற தாதாத்மிய சம்பந்தமடைந்து,—சின்பதமான - சித்துப்பதமா கிய,—அசிபத சிவத்தைச்சேர்ந்து - அசிபதார்த்தமான சிவத் தையடைந்து,—அதற்கு - அச்சிவத்துக்கு அங்கமாய்நின்றுல்- தான் அங்கமாக விருக்குமாகில்,—மன்பத முத்தி முடிந்தது வாகும் - நிலைபெற்ற மோக்ஷபதத்தை யடைந்து முடித்த தாம்,—மற்றவைதனி னிற்கில்-இக்கிரமமொழிந்து முற்சொல் லிய கிரியாமார்க்க முபாசனுமார்க்க சித்தாந்தத்தை முத்தி முடிவென் றங்கீகரித் திருப்பார்களாகில்,—குறையே - சம்பூ ரண முத்தியல்லவாம், எ - று. ௬௦

கங்கையுமிடைச்சேரியுமொன்றுக்கொன்று
கைவிட்டதுவிட்டதொக்கும்
இங்ஙனங்குந்தமும்மொருவனுமற்
றிடைவிடாததுவிடாதொக்கும்
எங்ஙனமவனுமிவனுமற்றிடைவிட்
டிடைவிடாதிருத்தலுங்கூடுந்
துங்கவவ்வசிக்குப்போந்திடுமருத்தந்
தோன்றிடாமறைநெறியோர்க்கே.

இ-ள். கங்கையும் - கங்கையும்,—இடைச்சேரியும் - கரையிலுள்ள இடைச்சேரியும்,—ஒன்றுக்கொன்று கைவிட்டது- கங்கைகோஷ்டிக்கின்ற தென்றபோது கங்கைகோஷ்டிக்கவறியாது கங்கைக்கரையிலுள்ள இடைச்சேரி கோஷ்டமென்று கண்டவிடத்து கோஷ்டமென்றசொல் இடைச்சேரியைப்பற்றிக் கங்கையை விட்டுவிட்டது,—அதுவிட்டதொக்கும் - அதுபோலச் சம்சர்க்கவாக்கியப்படி தொம்பதத்துக்குச்சொன்ன விட்ட லக்ஷணை யொத்திருக்கின்றது,—இங்ஙனங் குந்தமும் ஒருவனும்போல - குந்தம் புறப்பட்ட தென்றவிடத்து அக்குந்தம் குந்ததாரியைவிட்டு தனித்தும் புறப்படாது அக்குந்தம் குந்ததாரியை விடாததுபோல,—விடாதொக்கும் - விசிட்ட வாக்கியப்படி தற்பதத்துக்குச்சொன்னவிடாதலக்கணையுமொத்திருக்கின்றது,—எங்ஙனம் அவனுமிவனு மற்றிடைவிட்டிடைவிடாதிருத்தலும் கூடும் - அகண்ட வாக்கியப்படி சோயந் தேவதத்தகாவென்ற விடத்துக் காசியிற் சுயம்பாகியாயிருந்தவோர் தேவதத்தனாகிய புருடன் காஞ்சியில் அரசனாயிருந்து இப்போது கண்டியிற் சந்நியாசியா யிருக்கின்றனன்,—இவனேஅவன் அவனே யிவனென்று அங்கங்குள்ள காலதேசவேடங்களைவிட்டுச்சுயம்பாகி அரசன் சந்நியாசியாகிய புருடன் விடாததுபோல அசிபதத்துக்கு விட்டுவிடாத லக்ஷணைப்பொருள்கொள்வது எங்ஙனங்கூடும், கங்கைக்குக் கோஷ்டம்

விட்ட லக்ஷணமிருக்கின்றது போலும், சுத்தத்துக்குப் புருடன் விடாத லக்ஷண மிருக்கின்றது போலும், தேவதத்தனிடத்திற் காலதேச வேடங்கள் விட்ட லக்ஷணமும் விடாத லக்ஷணமு மிருக்கவேண்டும், அஃதன்றியும் லக்ஷியப்பொருளினிடத்து லக்ஷண மிருக்கவேண்டும் அங்ஙனமில்லாமையால் எங்ஙனம் அசிபதத்துக்குச்சொன்ன லக்ஷணங்கூடும், ஆகையால்,—துங்கவவ்வசிக்குப் போந்திடு மருத்தம் - பரிசுத்தமான அசிபதத்துக்குள்ளபொருளும் இலக்ஷணையும்,—தோன்றிடாமறை நெறியோர்க்கு - உபாசனா மார்க்கத்தை யுடைய வைதிகர்களுக்குவிளங்கமாட்டாது. அவர்கள் அசிபதத்துக்குச் சொன்ன அருத்தம் ஒவ்வாமையைப்பற்றி மற்றைய தொம்பததற்பதங்களுக்குச் சொன்ன அருத்தமும் ஒவ்வாதென்பது கருத்து,—அவை மேல்வருஞ் செய்யுளாற்காண்க. கக

சீவனதுபாதியீசனதுபாதிதீர்ந்து
சித்திரண்டதுமொன்றே
யாவதுவிட்டுவிடாதலக்கணையென்
றறைந்திடிற்பங்கமோரிரண்டும்
மேவலைநீங்கல்விட்டலக்கணையாம்
விளங்குஞ்சித்திரண்டதுமொன்றே
யாவதுவிடாதலக்கணையாகு
மதற்குமேலிலக்கணையின்றும்.

இ - ள். சீவனதுபாதி - தொம்பத முக்கிய சீவகாரியோபாதியும்,—ஈசனதுபாதி - தற்பத முக்கிய ஈசுரகாரணோபாதியும்,—தீர்த்து - ஆகிய இருவர்க்குமுள்ள இருவித வுபாதிகளு நீங்கி,—சித்திரண்டது மொன்றே யாவது - சீவசாக்ஷியாகிய கூடஸ்த சித்தும்,—ஈசுரசாக்ஷியாகிய பிரமச்சித்தும் ஒன்றாக விளங்கலே,—விட்டுவிடாத லக்கணை யென்றறைந்திடில் - விட்டுவிடாத லக்ஷணை யென்று சொல்லில், அவை அசிபதத்துக்

குப் பொருந்ாது இதனுனே மற்றைய தொம்பத தற்பதங்க ளுக்குச்சொன்ன அருத்தமும் பொருந்ாது பின்னெங்ஙனம் பொருள்கொள்வ தென்னில்,—உபாதியோ ரிரண்டு மேவலை நீங்கல் - சீவேஸ்வரருக்குள்ள காரிய காரண வுபாதிக ளிரண் டையும் விசாரித்து நீக்கலே,—விட்டலக்கணையாம் - விட்ட லக்ஷணை யென்று சொல்லப்படும்,—விளங்கு சித்திரண்டது மொன்றேயாவது - கூடஸ்த பிரமமாகிய இரண்டு சித்து மொன்றாக விளங்குதல்,—விடாத லக்கணையாகும் - விடாத லக்கணை யென்று சொல்லப்படும்,—அதற்கு மேலிலக்கணை யின்றும் - அதற்கு மேற்சொல்லப்பட்ட விட்டுவிடாத லக்க ணையுமதற்குப்பொருளும் உபாசனு மார்க்கத்தையுடையவைதி கர்களுக்குக் கிடையாது காண்க. கஉ

விட்டலக்கணையும்விடாதலக்கணையும்
விட்டுவிடாதலக்கணையும்
திட்டமதுறவேதேர்ந்திடிற்பந்தந்
தீர்ந்திடல்விட்டலக்கணையாம்
இட்டநல்லதிட்டானம்மதுதானு
யிருத்தலேவிடாதலக்கணையாம்
எட்டறுசிவத்துக்கங்கமாயிருத்தல்
விட்டுவிடாதலக்கணையே.

இ - ள். விட்ட லக்கணையும் - விட்ட லக்ஷணத்தையும்,—விடாதலக்கணையும் - விடாத லக்ஷணத்தையும்,—விட்டுவிடாத லக்கணையும் - விட்டுவிடாத லக்ஷணத்தையும்,—திட்டமதுற வேதேர்ந்திடில் - கிரமமாக விசாரிக்குமிடத்தில்,—பந்தந்தீர்ந் திடல் - சீவேஸ்வரர்களுக்குள்ள காரியகாரண வுபாதிகணீங்கு தலே,—விட்டலக்கணையாம் - விட்டலக்ஷணை மென்று சொல் லப்படும்,—இட்ட நல்லதிட்டானம் மதுதானு யிருத்தலே - மிகவும் விரும்பதக்க விவ்விருத சாட்சியாகிய அருள் தானுய்

விளங்கியிருத்தலே,—விடாதலக்கணையாம் - விடாத லக்ஷணை யென்று சொல்லப்படும்,—எட்டறு சிவத்துக்கு - அடைதற் கரிய சிவத்துக்கு,—அங்கமாயிருத்தல் - அவ்வருளங்கமாயிருக் கின்றதே,—விட்டுவிடாத லக்கணையே - விட்டுவிடாதலக்ஷணை யென்று சொல்லப்படும், என்பதாம்.

வி - ம். இரண்டாம் பதத்திற்கு அருத்தம், வைதீகர்கள் ஈசுரனைக் கொள்வார்கள் அவ்வீசுரனையே சைவசித்தாந்திக ளும், சிவாத்வைதிகளும் அருளாகக் கொள்வார்கள். கரு

தத்துவமசியென்றுரைக்குமுப்பதத்திற்
றகுவன்னநான்கதாமவையும்
ஒத்துறுதொந்தற்பதமவைதன்னி
லொன்றொன்றுமசியினிலிரண்டாம்
தொத்துதலகன்றுசுத்தமாயிருத்தல்
தொல்லதிட்டானந்தானுதல்
ஒத்துறுமவையிலொன்றொன்றுமசியி
லோரிரண்டங்கமுஞ்சிவமே,

இ - ள். தத்துவமசியென்றுரைக்கும் - தத்துவமசியென் றுசொல்லப்பட்ட,—முப்பதத்தில் - மூன்று பதங்களினும்,— தகுவன்ன நான்கதாம் - தகுதியுள்ள வக்கரங்கள் நான்காம், —அவையும் - அவ்வக்கரங்களும்,—ஒத்துறு தொந்தற் பதம வைதன்னில் - கிரமமாகப் பொருந்திய தொம்பதத்தினும் தற் பதத்தினும்,—ஒன்றொன்றும் - த்வம் எனவோர் ரக்கரமும் தத் எனவோ ரக்கரமுமாக விருக்கும்,—அசியினில்,—அசி யென்னும் பதத்தில்,—இரண்டாம், அ என்றும், சி என்று மிரண்டக்கரமாக விருக்கும் இக்குறிப்பானே,—தொத்துதல கன்று-ஜீவேசுரர்களுக்குள்ள காரியகாரண வுபாதிகணீங்கி,— சுத்தமாயிருத்தல் - கூடஸ்த்த பிரம்மமாக விளங்கி யிருத்தல் துவம்பதத்துக் கருத்தம், — தொல்லதிட்டா னந்தானுதல் -

அக்கூடஸ்த்த பிரம்மத்துக்குச் சாட்சியானவருள் தானக விளங்கியிருத்தல் தற்பதத்தி னருத்தம்,—ஒத்துறும் அவையில் - ஒற்றுமையாயுள்ள அவையில் அத்தொம்பதத்தில்,—ஒன்றென்று - தொம்பதத்திற்கு வுபாதி சம்பந்தரான சீவேஸ்வரச்சித்துப் பொருளொன்று தற்பதத்திற்கு வுபாதிரகிதகூடஸ்தப்பிரம்மச்சித்துப் பொருளொன்று,— ஆம் - ஆக வொவ்வொரு பொருளாம்,—அசியில் - அசியென்றும் பதத்தில்,—ஓரிரண்டு - அகரம் சிகரமாகிய யிருபதத்துக்கும்,—அங்கமும்- அகரத்தி னருத்தம் அருளாகிய அங்கமும்,—சிவமே - சிகரத்தினருத்தம் சிவமாகிய லிங்கமுமாக விளங்கி யிருக்குமென் றறிவாயாக, என்பதாம். கச

சுத்தமாய்நின்றாலிச்சைசுத்தியதாந்
தொல்லதிட்டானமாய்நின்றால்
சித்தமாய்ஞானஞ்சுத்தியதாகுஞ்
சிவத்தினுக்கங்கமாய்நின்றால்
மத்தமாங்கிரியைசுத்தியதாகும்
வகுத்தவிம்மூன்றுமற்றொழுங்கில்
சித்தமாய்ச்சுத்தியிலாவிடின்மீட்டுந்
தேகமொன்றெடுக்குமென்றுணர்வாய்.

இ-ள். சுத்தமாய் நின்றால் - தொம்பதார்த்தப்படி காரியகாரண உபாதிகணீங்கிச் சுத்த சீவனக இருந்தால்,—இச்சை சுத்தியதாம் - இச்சாசத்தி காரிய நஷ்டமாகும்,—தொல்லதிட்டானமாய் நின்றால் - தற்பதார்த்தப்படி அச்சீவன் நிலைபெற்ற சாட்சியாகிய அருள்தானகை விருந்தால்,—சித்தமாய் - உண்மையாய்,—ஞானஞ்சுத்தியதாகும் - ஞான சத்திகாரிய நஷ்டமாகும்,—சிவத்தினுக்கங்கமாய் நின்றால் - அசிபதார்த்தப்படி அவ்வருள் சிவத்துக்கங்கமாக யிருந்தால்,—மத்தமாங்கிரியை சுத்தியதாகும் - மயக்கத்தைச்செய்யுங் கிரியாசத்தி காரிய நஷ்டமாகும்,—வகுத்த விம்மூன்றும் - சொல்லிய

இவ்விச்சா ஞானக்கிரியைகண் மூன்றும்,—ஒழுங்கிற் சித்த மாய் - கிரமப்படி உண்மையாய்,—சுத்தியிலாவிடில் - சுத்தியாகாவிட்டால்,—மீட்டும் - மறுபடியும்,—தேகமொன்றெடுக்குமென்றுணர்வாய் - ஒருதேக மெடுக்கவேண்டுமென் றறிவாயாக, என்பதாம்.

வி - ம். சிவத்துக்கு ஆன்மாக்களைத் திருவடி அடைவிக்க வேணு மென்பதே இச்சை, ஆன்மாக்களது கன்மங்கண் முழுதுந்தொகுத்துணர்ந்து பின்வகுத்திடலே ஞானம், சத்திகளையுஞ் சத்திமான்களையுங் கொண்டு சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்களை நடத்தலே கிரியை, ஆதலால், தனதிச்சைப்படி ஆன்மாகாரிய காரண வுபாதிகணீங்கிச் சுத்தமான விடத்து, சிவத்துக்கு இச்சையொழியும், அவ்வான்மா அருளிற்றுதான்மியமடைந்து அருளாய் விட்டபோது கன்மங்களைத் தொகுத்துணர்ந்து வகுக்கவேண்டுவதில்லை. ஆதலால் ஞானசத்தியொழியும் அவ்வருள் சிவத்துக்கு அங்கமான விடத்துச் சத்திகளையுஞ் சத்திமான்களையுங் கொண்டு சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்களை நடத்துங்கிரியா சத்தியொழியும், கிரமப்படி இச்சத்திகள் மூன்றுஞ் சுத்தியாக வேண்டும், அப்படி சுத்தியாகாவிடில் சிவத்துக்கு இச்சாஞானக்கிரியை யொழியாது அவைகளுள்ளவரையில் ஆன்மாவுக்கும் இச்சாஞானக்கிரியை யொழியாது இவ்வான்மாவின திச்சை அந்தக்கரணத்தினிடத்தும் ஞானம் ஞானேந்திரியங்களினிடத்தும் கிரியை கன்மேந்திரியங்களினிடத்தும் சென்று பற்றியழுந்தும், அழுந்தவே விருப்புண்டாம் அதனால் நல்வினை தீவினையுண்டாம், அதனால்சனன மரண முண்டாம் ஆதலால் சுத்தியில்லாவிடில் மீட்டுந்தேக மொன்றெடுக்கு மென்றுணர்வா யென்றார், ஈண்டு ஒருதேக மென்பது, எண்பத்துநான்குநூறாயிரந் தேகபேதத்திற் ஏதேனுமொரு தேகமெனப்பொருள்.

கரு

தொம்பதம் விளங்கின்மேல்வினைமறைத்த
தொல்லிரு ளகன்றுபோயொளிக்குந்
தம்பதமான தற்பதம்விளங்கிற்
சஞ்சிதமாயைபோ யொளிக்கும்
அம்பதமானவசி பதம்விளங்கி
லரும்பிரார்த்தம்போ யொளிக்கும்
செம்பரவருளே வடிவதாயான்மா
சிவத்தினுக் கங்கமாய்நிகழும்.

இ-ள். தொம்பதம் விளங்கில் - தொம்பதார்த்தமான கூடஸ்தன்விளங்கினால்,—மேல்வினை ஆகான்மியகன்மமும்,—மறைத்த தொல்லிருள் - ஆன்மஞானத்தை யாவரித்த அநாதியான வாணவமலமும்,—அன்றுபோயொளிக்கும் - ஆகிய விரண்டும் நீங்கிப்போய்விடும்,—தம்பதமான தற்பதம் விளங்கில் - தற்பதார்த்தமான அருள் விளங்கில்,—சஞ்சிதம் - சஞ்சித கன்மமும்,—மாயை - மாயாமலமும்,—போயொளிக்கும் - ஆகியவிரண்டும் நீங்கிப்போய்விடும்,—அம்பதமானவசி பதம் விளங்கில்-அழகிய வசிபதார்த்தமான சிவம்விளங்கில்,—அரும்பிராரத்தம்போயொளிக்கும் - அரிய பிராரத்தகன்மமும் கன்மமலமும் போய்விடும்,—செம்பதவருளே வடிவதாயான்மா - அப்போ தான்மா செவ்விய திருவருளே வடிவாய்,—சிவத்தினுக்கங்கமாய் நிகழும் - அசிபதார்த்த சிவத்துக்கு அங்கமாகவிளங்கியிருக்கும் என்பதாம்.

வி-ம். துவம்பதத்துக்குள் ஏழுபாதி ௨௬-தத்துவங்களும் நியதி வாக்கியப்படி தானல்லவென்று கண்டு கழன்று சீவசாட்சியான கூடஸ்தானுபவம் விளங்குமாகில் முன் ஒரு தேகத்தையும் அதற்குள்ள கரணங்களையுந் தானென்றும் ஒரு கிருகத்தையும் விடையபோகங்களையுந் தன்னதென்றும் அபிமானித்திருந்த சிற்றறிவுபோய் எல்லாந்தானகவுந் தன்னதா

கவும் விளங்கும். அதனால் இதாகிதமாகிய ஆகாமிய வினைவற்றுப்போய்விடும். ஆதலால் மேல்வினைபோ யொளிக்கும் என்றார். சுனையுந்தோடும் பிரிபடாதிருந்த புளியம் பிஞ்சுபோல தேகமே தானாய்ப் பிரிவுபடாது அறிவை மூடியிருந்த அனாதி ஆணவவிருளானது இப்போது விசாரமுகத்தானும் ஆசிரியரது கடைக்கண் குறிப்பின்படி அனுட்டிக்குஞ் சமாதி அநுபவத்தானும் தேகம் வேறு ஆன்மா வேறாய்ப் பிரிவுபட்டபோது அவ்வாணவமலவிரு ணீங்கியபடியால் மறைத்த தொல்விருளகன்றுபோம் என்றார். தற்பதார்த்தமான அருள் விளங்குமாகில் ஒரு வீட்டில் அக்கினிபற்றிக்கொண்டபோது அதனுள் நெடுநாளார்ச்சித்து வைத்திருந்த சகல சொத்துக்களும் இதனோடுகூட நஷ்டமடைவதுபோல அருளுதையமானவிடத்து அவித்தையாவிருள் கெட்டு அதனுள் அநேக சனனங்குரமாகக் கட்டுண்டுகிடந்த சஞ்சிதகன்மங்கள் நஷ்டமடையும். அன்றியும் விளைவற்ற விடத்துக் களஞ்சியக் கட்டுக்கிடைக்கு வரவற்றுப்போவதுபோல முன்னமே ஆகாமியவினைவற்றமையால் சஞ்சித கன்மங் கட்டுக்கிடையாகமாட்டாது. ஆதலால் சஞ்சிதம்போயொளிக்கும் என்றார். போகபோக்கிய பிரேரகமென்னு முக்கண்டங்களாய் ஆன்மாவினது இச்சாஞானக்கிரியைகளை விளக்கியிருந்த ௩௬ - தத்துவங்களான மாயாகாரணங்களெல்லாம் இருளில் விளக்கிக்கொண்டிருந்த சந்திர நட்சத்திரமின்மினியாதி யொளிகளெல்லாம் சூர்யோதயமானவிடத்தில் தமது கௌரவங்கெட்டு அவ்வொளியாய் நின்றாற்போல அருள் மேலிட்டகாலத்து அம்மாயா காரணங்களெல்லாம் அருட்காரணமாகவே விளங்கியிருக்கும். ஆதலால் மாயை போயொளிக்கும் என்றார். அசிபதார்த்தமான அங்கலிங்கைக்கிய சிவானுபவம் விளங்குமாகில் ஆநந்தி ஆநந்தமென்னும் பேதபாவமொழிந்து ஆநந்தமே வடிவமான சிவந் தானாகி விளங்கும். பரமுத்தர்களுக்குப் பிராரத்தபோகமில்லை ஆத-

லால் அரும் பிராரத்தம்போயொளிக்கும் என்றார். அவ்வித அங்கலிங்க ஐக்கியானந்தத்திற்கு மேற்பட்ட ஆனந்தானுபவம் வேறின்மையால் இச்சாங்குரமான கன்மமலம் போய்விடும். ஆதலால் கன்மமலமும் போயொளிக்கும் என்றார். அமுது படிக்குத் தவிடும் உமியும் போனவிடத்து மத்தியிலுள்ள முளை போயிற்றென்று சொல்லவேண்டுவதின்றாயதுபோல ஆணவ மலம் மாயாமலமும் போனவிடத்து கன்மமலம் போயிற்றெ ன்று சொல்லவேண்டுவ தின்றாதலால் ஈண்டு கன்மமலத்தைக் கூறினாரில்லை.

கரு

அடுத்தமற்றிரண்டுசெனனத்தில்வீட்டை
யடைத்திடுந்தொம்பதநெறியோர்
அடுத்தமற்றொன்றுசனனத்தில்வீட்டை
யடைந்திடுந்தற்பதநெறியோர்
அடுத்தவிச்சனனந்தனி லடைந்திடும்வீ
டசிபதநெறியுளோரிவரும்
அடுத்தவிவ்வுடலோ டடைந்திடாவிடின்மே
லாக்கை யொன்றெடுக்குமென்றுணர்வாய்.

இ - ள். தொம்பத நெறியோர் - தொம் பதார்த்தமான கிரியாமார்க்கத்தையுடைய சைவ சித்தாந்திகள்,—அடுத்தமற் றிரண்டு சனனத்தில் - தற்சனனத்தோ டிரண்டுசனனத்தில், —வீட்டையடைந்திடும் - மோக்ஷத்தையடைவார்கள்,—தற் பதநெறியோர் - தற்பதார்த்தமான உபாசனா மார்க்கத்தை யுடைய வைதிகர்கள்,—அடுத்த மற்றொன்றுசனனத்தில் - தற் சனனத்தோடு பின் ஒரு சனனத்தில்,—வீட்டை யடைந்தி டும் - மோக்ஷத்தை யடைவார்கள்,—அசிபத நெறியுள்ளோர்- அசி பதார்த்தமான சுத்த மார்க்கத்தையுடைய சிவாத்வைதி கள்,—அடுத்த விச்சனனந்தனில் - தற் சனனத்திற்றானே,— அடைந்திடும் வீடு - மோக்ஷத்தை யடைவார்கள்,—இவரும் - இச்சிவாத்வைதிகளும்,—அடுத்த விவ்வுடலோ டடைந்திடா

விடில் - பொருந்திய இச்சரீரத்தோடுகூட மோட்சத்தையடையாது பிறருக்குத்தரிசன பரிசனம்பட இத்தேகத்தை யிங்கே விட்டடைவார்களாகில் மேலாக்கை யொன்றெடுக்குமென்று - மீண்டுமொரு தேகமெடுத்தே மோட்சமடைய வேண்டுமென்று,—உணர்வாய் - நீயறிவாயாக என்பதாம்.

வி - ம். தொம்பதத்துக்குப் பின்னுசத்தி காரியமானகாரிய உபாதிகணீங்கி ஆன்மாசுத்தனுய்ச் * சிவ சமானத்துவமாயிருப்பதே யுண்மை நிலையெனக்கொள்ளும் சைவர்களுக்குப் பின்னுசத்திக் காதாரமான அபின்னுசத்தியும் சிவசத்தியுமிருத்தலால் அவர்கட்கிரண்டு சனனமுண்டென்றும், தற்பதத்துக்கு அபின்னுசத்தி காரிய காரணுபாதிகணீங்கி இவ்வுபாதிகளுக்கு ஆதாரமான பின்ன முதலிய நவப்பிரகாரத்தாலு நிருவகிக்கக்கூடாத மாயையானது ககன குசுமம்போலப் பொய்யென்றும், தொம்பத தற்பத லக்ஷியார்த்தாளான கூடஸ்த பிரம ஐக்கிய சர்வசாட்சியாக விளங்கலே உண்மை நிலையெனக்கொள்ளும் வைதிகர்களுக்கு அபின்னுசத்திக் காதாரமான சிவசத்தியிருத்தலால் இவர்களுக்கு ஒரு சனனமுண்டென்றும், அசிபதத்துக்கு அங்கலிங்க ஐக்கியமே உண்மை நிலையெனக் கொள்ளுஞ் சிவாத்வைதிகளுக்கு மேற் சத்தி சம்பந்தமில்லாமையால் இவர்களுக்கு இத்தேகம் ஒன்றே யென்றும் சொல்லப்பட்டது. ஈண்டு சிவசத்தியென்றது அருளை. மாயாசத்திக ளெம்மட்டுண்டு அம்மட்டும் பிறப்பைக்கொடுக்குமென்று ஆப்தவாக்கிய மிருத்தலால் சத்தி சம்பந்தங்கணீங்கி யான்மா சிவத்துக்கங்கமாக இருத்தலே உண்மைநிலையெனக்கொள்க.

---

* சிவசமானத்துவம் என்பது, முத்தியிலான்மாச் சிவனைப் போலிருப்பன் எனக்கொள்ளுபவர். இது அக புறச்சமயத்தாருளொருவராகிய சம்வாத சைவர் கொள்கை.

ஒடுங்கிடுங்காலந்தோன்றினவடைவே
யொடுங்கிடுமென்றுரைப்பதனால்
ஒடுங்கியகாலஞ்சத்தியவாதிக்கொடுங்குமிவ்
வுடல்தன்மாத்திரையில்
ஒடுங்கிடுங்காலம்சத்தியவாதிக்கொடுங்கு
மிவ்வுடலசத்தியமாய்
ஒடுங்கிடுங்காலமுடலிங்கேவீழ்ந்தா
லொடுங்கின தில்லையென்றுணர்வாய்.

இ-ள். ஒடுங்கிடுங்காலம்-இத்தேகஞ் சங்கார காலத்தில்,—தோன்றின வடைவே - சிருட்டிக்கிரமம்போலவே,—ஒடுங்கிடுமென்று - ஒடுங்கவேண்டு மென்று,—உரைப்பதனால் - ஆகமவேத உபநிடதங்கள் கூறுகையால்,—ஒடுங்கிடுங்காலம் - இத்தேகம் சங்காரகாலத்தில்,—சத்தியவாதிக்கு - பதிபசுபாசங்களை நித்திய மென்னுஞ் சைவர்களுக்கு,—இவ்வுடல் - தூலபூத பரிணாமமான வித்தேகமானது,—தன் மாத்திரையில் - சூக்கும பூதத்தில்,—ஒடுங்கும் - ஒடுங்கவேண்டும்,—ஒடுங்கிடுங்காலம் - இத்தேகஞ் சங்காரகாலத்தில்,—அசத்தியவாதிக்கு - சீவேசுராதி செகத்துமித்தை பிரமமொன்றே நித்திய மென்னும் வைதீகர்களுக்கு,—ஒடுங்கு மிவ்வுடல சத்தியமாய்- இத்தேகம் பொய்யாய் ஒடுங்கிப்போய்விடவேண்டும்,—ஒடுங்குங்காலம் - இத்தேகஞ் சங்காரகாலத்து,—உடலிங்கேவீழ்ந்தால்,—மேற்சொல்லியபடி ஒடுங்காது இத்தேக மிவ்வுலகத்திற் றெரிசன பரிசனப்படவிருக்குமாகில்,—ஒடுங்கின தில்லையென்றுணர்வாய் - தோற்றிய கிரமப்படி ஒடுங்கின தில்லையென்றறிவாயாக என்க.

வி - ம். சைவர்கள் பின்னுசத்தியான அசுத்தமாயையில் அகங்காரந்தோன்றி அதிற் றன்மாத்திரைகள்தோன்றி அதிற் றூல. சூக்கும தேகங்கள் தோன்றுமென்று தோற்ற மங்கீகரித்திருக்கின்றமையால், ஒடுங்குங் காலத்தும் ஒடுங்குமிவ்

வுட லசத்தியமாயென்றார். சிவாத்துவிதிகள் அப்புத் தானே தடித்து உப்பாய்ப் பின்பு அதில் அப்புப் பிரவேசித்தகாலத்தில் அவை அப்பாய்க் கரைந்துபோதல்போல, அருள் தானே லீலையினாலே சீவேசுர செகத்தாய்த் தடித்துப் பின்பு அருளாய்க் கரையுமென்று பிரபஞ்சத்தோற்ற ஒடுக்கம் அங்கீகரித்திருக்கின்றமையால் ஒடுங்கிடுங்காலம் உடலிங்கே வீழ்ந்தாலொடுங்கினதில்லை யென்றுணர்வாய் என்றார். தோன்றினவடைவே யொடுங்குமென்பதற்கு உ-ம். கைவல்லியம் "படமூறாலும்போற் செய்தபணியும் பொன்னும்போற் பார்க்கிற், கடமுமண்ணும்போ லொன்றாங் காரியகாரணங்கள், உடன்முதற் சுபாவமீறா யொன்றிலொன் றுதித்தவாறே, அடைவினிலொடுக்கிக் காண்பதபவாதவுபாய மாமே." என்பது காண்க. சிவஞானதீபம் "சத்தத்தில் வெளியுதிக்கும் பரிசந்தன்னிற் சமீரணனுற்பவமாகு முருவந்தன்னில் - ஒத்தொளிரு மங்கியிரதத்திற் றோன்று முதகமிகுங் கந்தத்திலுதிக்கும் பூமி - வைத்தகுண மொன்றினுக்கொன்றதிகமாக மலரயன் முன்னைவாதி தெய்வமாகுந் தத்துவங்கள் சிவமாதி புவியீறாகத் தருமுறையே யொடுக்குமெனச் சாற்றுநூலே" என்பதுகாண்க.

மேலொருவடிவையெடுத்ததேயாகின்
மேவுமிவ்வுடலிங்கேவிழும்
மேலொருவடிவையெடுத்ததின்றாகின்
மேவுமிவ்வுடலிங்கேவீழா
மேலொருசிவத்தைச்சீவன்சென்றடையு
மேவுமிவ்வுடலிங்குத்தானே
மேலொருசிவத்தின்வடிவதாமருளாய்
வெளியதாமுலகுகண்டிடவே.

இ-ள். மேலொருவடிவை-ஆன்மா வேறொரு தேகத்தை,—எடுத்ததேயாகின் - எடுத்தால் மாத்திரந்தான்,—மேவுமிவ்

வுடல் - தானடைந்திருந்த இச்சரீரமானது,—இங்கேவீழும் - இவ்வுலகத்தில் உயிரிழந்து கிடக்கும்,— மேலொருவடிவை - ஆன்மா வேறொருதேகத்தை,—எடுத்ததின்றாகின் - எடாதிருப்பது உண்மையாகில்,—மேவுமிவ்வுடலிங்கேவீழா - தானடைந்திருந்த இத்தேகமானது உயிரிழந்து இங்கே வீழ்ந்துகிடவாது,—மேலொரு சிவத்தை - ஒப்பற்ற சிவத்தை,— சீவன் சென்றடையும்,— சீவனானவன் போயடைந்தது உண்மையானால் - மேவுமிவ்வுடலிங்குத்தானே,—தானடைந்திருந்த இத்தேக யிவ்வுலகத்திற்றானே,—மேலொரு சிவத்தின் வடிவதாமருளாய்,—ஒப்பற்ற சிவாங்கமான திருவருளாய்க் கரைந்து போய்விடும்,—வெளியதா மூலகுகண்டிடவே. தாயுமானவர். "வெளியா யருளில் விரவுமன்பர்தேக-மொளியாய்ப் பிறங்கியதுமுண்டோபராபரமே." கக

இதற்குதாரண மொன்றுணர்த்துகின்றார்.

சூக்குமமதனினின்றுமுன்வினையிற்
 றூலதேகமுமுளதாகும்
சூக்குமந்தனதுகாரணமடையிற்
 றூலமுஞ்சூக்குமத்தடையும்
சூக்குமந்தனதுகாரணமடையத்
 தூலமிங்ககன்றதேயென்றால்
சூக்குமந்தனதுகாரணம்விடுத்து
 தூலமொன்றெடுத்ததென்றுணர்வாய்.

இ-ள். சூக்கும மதனினின்று-சூக்கும தேகத்தினின்று,—முன்வினையில்-பூருவ சன்மத்திற்செய்த கன்மத்துக்கீடாய்,—தூலதேகமு முளதாகும் - பஞ்சபூத பரிணாமமான தூலதேகமுண்டாகும்,— சூக்குமந் தனது காரணமடையில் - சூக்கும தேகமானது தனக்காதாரமான காரணதேகத்தை யடையுமாகில்,—தூலமுஞ் சூக்குமத்தடையும் - அக்காலத்தில் தூல

தேகமுந் தனக்காதாரமான சூக்கும தேகத்தையடையும்,— சூக்குமந் தனது காரணமடைய - சூக்கும தேகமானது தனக் காதாரமான காரண தேகத்தையடைய, — தூலமிங்ககன்ற தேயென்றால் - அதுபோலவே தூலதேகமுந் தனக்காதார மான சூக்கும தேகத்தை யடையாது விடுத்து இவ்வுலகத்தில் பிறர் பரிசன தெரிசனப்பட உயிரிழந்திருக்குமாகில்,—சூக்கு மந் தனது காரணம் விடுத்து - சூக்குமதேகந் தனக்காதார மான காரணதேகத்தை யடையாது விடுத்து,—தூலமொன் றெடுத்ததென்றுணர்வாய் - வேறொரு தூலதேகத்தை யெடுத் துக்கொண்டதென்றறிவாயாக என்க.

வி - ம். அபஞ்சி கிருதபஞ்சதன் மாத்திரைகளாலான சூக்கும சரீரமான அநாதி அந்தக்கரணங்களின் விருப்பு வெறுப்பாகிய நல்வினை தீவினை யென்னுங் கன்மத்தாற் றூல சரீரமுண்டாயின வென்னுஞ் சுருதியும் சொற்பன சங்கற்பத் தினின்றுந் தூலசரீர சங்கற்ப முண்டாகின்ற யுக்தியு மிருக் கின்றமையால், சூக்கும மதனி னின்று முன்வினையிற் றூல தேகமு முளதாகும் என்றார். சர்வசம்மார காலத்துப் பூதபரி ணுமமான சர்வதூல சரீரங்களும் அதற்காதாரமான தூல பூதத்தி லொடுங்க அவை சூக்கும பூதத்தி லொடுங்க அவை காரண சரீரமென்றும், ஆணவமல மென்றும் பரியாய நாமத் தையுடைய அவித்தையி லொடுங்குமென்று சுருதியும், இப் போது தூல சரீரவாதனை சூக்கும சரீரத்திலும் சூக்கும சரீர வாதனை சுழுத்தியான காரண சரீரத்திலும் ஒடுங்குகின்ற யுக் தியுமிருக்கின்றமையால், சூக்குமந்தனது காரணமடையத்தூ லமுஞ் சூக்குமத்தடையும் என்றார். இப்போது நித்திராகா லத்தில் சூக்கும சரீரமானது சுழுத்தியான காரணதேகத்தை யுடைய தூலசரீரம் தெரிசன பரிசனப்பட இருக்கின்ற அனுப வமும் அரிய மெய்ஞ்ஞானத்தியா லவித்தையாமுட னீறும். பெரியதூலமும் காலத்தாற் பிணமாகிவிழும். என்று சுருதி

யும் இருக்கின்றமையால் சூக்கும சரீரங் காரணசரீரம் இது கள் திருவருளிற் கரைந்தாற் போதாதோ தூலசரீரமுங்கரை யவேண்டுமோ வென்னில், ஆன்மாக்கள் கன்மத்திலாற் புண் டிளைப்பாறும் பொருட்டுக் காரணதேகமான தமோகுண நித் திரமயக்கத்தை யடைந்தே யல்லது நேரே சர்வாத்ம சகித மான அவித்தையாகிய காரணதேகத்தை யடைந்ததல்ல. ஆத லால் நீ அங்ஙனஞ் சொல்வது அனுபவமன்று. பெரியதூலமுங் காலத்தாற் பிணமாகிவிழும். அரியமெய்ஞ்ஞான தீயால் அவித் தையாமுடனீருகும் என்ற சுருதியாரும் தோற்ற வொடுக்க கிரமங்கூறவந்தாரில்லை ஆதலால், அவை பிரமாணமன்று, அன் றியும் நீ கூறியபடி நித்திராகாலத்தில் சூக்கும சரீரமானது காரண சரீரத்தில் பரிச்சின்னமின்றி வொடுங்கியதுபோலத் தூலசரீரமுந் தனக் காதாரமான சூக்கும சரீரத்தில் வேறுய்ப் பரிச்சின்னமின்றி அபரிச்சின்னமாயல்லோ வொடுங்க வேண் டும் அங்ஙனமின்று. ஆதலால் நீ கூறிய சுருதியும் யுக்தியும் கிர மமன்று. தூலசரீரம் வேறுய்த் தெரிசனப்பரிசனப்பட இறந்து விச்சினப்படுமாகில் வேருெரு தூலசரீரத்தை யெடுத்துக் கொண்டமையாற்றுன் இங்கேயிறந்து விச்சினப் பட்டது என்று கொள்ளவேண்டும். ஒருசட்டைக்காரன் போட்டிருந்த பழைய சட்டையைக் கழற்றியிருக்கக்கண்ட விடத்து வேருெ ருபுதிய சட்டை போட்டிருந்தால் மாத்திரந்தான் இப்பழைய சட்டையைக் கழற்றுவான் இல்லாவிடிற் கழற்றுன் இதைக் கழற்றியிருக்கக் கண்டவிடத்து அதைப்போட்டிருப்பானென் பது கருத்து ஆதலால், சூக்குமந்தனது காரணம் விடுத்துத் தூலமொன்றெடுத்த தென்றுணர்வாய், என்றுர். உ0

தூலவிவ்வுடலைவிடுத்துநில்லாது
சூக்குமஞ்சூக்குமம்விடுத்துத்
தூலநில்லாதிதிரண்டையும்விடுத்துத்
தொல்லுயிர்நிலாதுயிர்விடுத்துத்

தூலசூக்குமங்கணின்றிடாதுயிருஞ்
சூக்குமமும்முடிவடைந்தால்
தூலமுமுடிவையடைந்திடாதிந்தத்
தொல்லுலகினில்விழுந்திடுமோ.

இ - ள். தூலவிவ்வுடலை விடுத்து - இத்தூலதேகத்தை விட்டு,—நில்லாது சூக்குமம் - சூக்குமதேகந் தனித்து நிற்க மாட்டாது,—சூக்குமம் விடுத்து - சூக்குமதேகத்தைவிட்டு,—தூலநில்லாது - தூலதேகந் தனித்து நிற்கமாட்டாது,—ஈதிரண்டையும் விடுத்து - தூலசூக்குமமான இரண்டு தேகத்தையும்விட்டு,—தொல்லுயிர் நிலாது - அநாதி யவித்தையாகிய காரணதேகந் தனித்து நிற்கமாட்டாது,—உயிர் விடுத்து - அக்காரண தேகத்தைவிட்டு,—தூலசூக்குமங்க ணின்றிடா - தூலசூக்குமமான இரண்டு தேகங்களுந் தனித்து நிற்கமாட்டாது,—உயிருஞ் சூக்குமமும் முடிவடைந்தால் - காரணதேகமும் சூக்குமதேகமும் சிருட்டிக்கிரமம்போலத் தமக்காதாரமான அருளிலொடுங்குமாயின்,—தூலமும் முடிவை யடைந்திடாது - தூலதேகமுந் தனக்காதாரமான அருளையடையாது,—இந்தத் தொல்லுலகினில் விழுந்திடுமோ - இவ்வுலகத்தின்கண் பிறருடைய நேத்திரங்களுக்குத் தெரிசன பரிசனப் படும்படி வீழ்ந்து கிடக்குமோ என்க.

வி - ம். தூல சூக்கும சரீரமிரண்டிற்கும் ஆதாரமாயிருத்தலால், ஈண்டு காரணதேகமான அவித்தையை உயிரென்று உபசரித்தார் - அருளே இருளாகவு மருளாகவும் பிரணவமாகவும் லீலையாற்றடித்துக் கரைதலால், ஈண்டு அருளைமுடிவென்றார். உ - ம். தாயுமானவர். "சித்தநிருவிகற்பஞ்சேர்ந்தா ருடற்றீபம், வைத்தகற்பூரம்போல் வயங்கும் பராபரமே." உக

வினையினிலெடுத்தவிவ்வுடன்
மேலும்வினையுளதெனிலிங்கேயகலும்
வினையிலதெனிலிங்கிவ்வுடல்
தானேவினையறுமேமயமாகி
வினையுளவுடல்போற்றோற்றமாத்திரமாய்
விளங்கியேவெந்துறுபிரிபோல்
வினையிலாப்பரமமுத்தியில்வெளியாய்
விமலநல்லருளதாய்விடுமே.

இ - ள். வினையினி லெடுத்த விவ்வுடல் - கன்மத்தாலெடுத்த வித்தூல தேகமானது,—மேலும் வினையுள தெனில் - மீண்டும் சிருட்டிக்கேதுவான கன்மமுண்டாயிருந்தால் மாத்திரந்தான்,—இங்கேயகலும் - இவ்விடத்துப் பிறர்பரிசனதெரிசனப் படவுயிரிழந்திருக்கும்,—வினையில தெனில் - மீண்டுஞ் சிருட்டிக்கேதுவான கன்மமில்லாதிருக்குமாயின்,—இங்கு - இவ்வுலகத்தில்,—இவ்வுடல்தானே - இத்தூலதேகமே,—வினையறுமே மயமாகி - சகலகன்மமு நீங்கிய பிரணவமந்திரதனுவாய்,—வினையுள வுடல்போல் - கன்ம ஜென்னியமான தேகங்களைப்போல,—தோற்றன் மாத்திரமாய் விளங்கி - தோற்றல் மாத்திரமாக விளங்கியிருந்து,—வெந்துறு பிரிபோல - அக்கினியிற் றத்தமான பழுதைக்கயற்றைப்போலச் சிலநாட் சீவன் முத்தித்திசையிற் சஞ்சரித்து,—வினையிலாப் பரமமுத்தியில் - யாதொரு கிரியையு மின்றிய பரமுத்திகாலத்தில்,—வெளியாய் - யாவருங்காணத் தக்கதாக,—விமலநல்லருளதாய்விடும் - பரிசுத்தமு நன்மையு முள்ள அருளாய்க்கரைந்து போய் விடும், என்க.

வி - ம். இதனானே உபநிடதப் பிரிதிபாதகமாகியசுத்தமார்க்கமுத்தி சித்தாந்தமே உத்தமபட்ச முத்தியென்றும், மற்றைய இருவிதமார்க்க முத்திசித்தாந்தங்களும் மத்திமம் அதர்மமுத்தி சித்தாந்தமென்றும் விளங்குகின்றது. உ - ம்

சிவஞானதீபம். முத்திநெறிமூன்றுடல் பொடாவுடல்கொ ண்டோ - முத்தியையிங்கே பெறுவதுத்தமமாமுத்தி, மத் திமமாமுடலொடுசென்றடைந்திடுதல் கனிட்ட, மண்ணிலுடல் விட்டருளைநண்ணுவதாமவத்தை, யொத்துறிலும் பவமுள வாம வாவறுத்தல் துறவிந், குண்டாயின் முத்திபெறு முவமை யிதற்குலகிற், சித்தமுறு கவுணியர்கோனுவரை யாரூரன், சேரலன்மெய்ப்பொருளேனுதி நாதன் முதற்றெளியே. தாயு மானவர் - முத்தியினுந்தேகமிசை மூவிதமாஞ் சித்திபெற்றோ ரெத்தனை பேரென்றுரைப்பதெந்தாய் பராபரமே - மற்றும் வருவன வற்றுற்காண்க. ௨௨

சீவசிற்றறிவுமிம்முத்தவறிவாய்த்
திகழ்ந்திடினுடன்மருள்வடிவுந்
தாவருமோங்காரவ்வடிவாகுந்
தக்கசீவன்முத்தவறிவும்
மேவரும்பரமுத்தவ்வறிவாகில்
விளங்குமோங்காரவவ்வடிவும்
ஓவலிலந்தவருள்வடிவாகுமொழுங்கிதே
யென்றுணர்ந்திடுவாய்.

இ - ள். சீவசிற்றறிவு - சீவனதுசிற்றறிவானது,—இம்மு த்தவறிவாய்த் திகழ்ந்திடில் - சீவன் முத்தியானபேரறிவாய் விளங்குமாயின் - மருள்வடிவும் - மாயாவடிவான இத்தேக மும்,—தாவருமோங்காரவ்வடிவாகும்-நினைத்தற்கரிய பிரணவ மந்திரதனுவாம்,—தக்கசீவன் முத்தவறிவும் - தகுதியுள்ளசீவ ன்முத்தியான பேரறிவானது,—மேவரும் பரமுத்தவ்வறிவா கில் - அடைதற்கரிய பரமுத்தியானவிவேகவறிவாய் விளங்கு மாயின், — விளங்குமோங்காரவவ்வடிவும் - பிரகாசியாநின்ற சீவன்முத்தியான பிரணவமந்திரவடிவமும், ஓவலிலந்தவருள் வடிவாகும் - அழிவின்றிய பரமுத்தியான அருள்வடிவாம்,—

ஒழுங்கிதே யென்றுணர்ந்திடுவாய் - தோற்றவொடுக்கக்கிர மம் இதுவேயென்றறிவாயாக என்க.

வி - ம். ஆன்மாசிருட்டிக்குமுன் ஆணவத்திற் பதிவறிவாய்நின்றபோது அருள் ஆணவமலமென்னும் இருள்வடிவாயும், அப்பசுசிருட்டியில் சீவவறிவாய் நின்றபோது அருளானது மருளென்னு மாயாவடிவாயும், அச்சீவன் சீவன் முத்தியான பேரறிவாய் நின்றபோது அருளானது பிரணவமந்திரவடிவாயும், அச்சீவன் முத்தன்பரமுத்தியான விவேகவறிவாய் நின்றபோது அருளானது பழையபடி சீவாங்கமாயும் விளங்கியிருக்கும் ஆதலால் ஒழுங்கிதேயென்றார். உரு

பிராரத்தமுடன்பாடென்றெந்தநெறியும்
பேசிடுமின்னெறியதற்குப்
பிராரத்தமுடையோரருகரேயன்றும்
பிராரத்தம்பொசித்திடுவோர்கட்
கறுதிந்தமாயாதனுகரணங்க
ளதனினற்சிவத்துவமதனை
யுறுதுமற்றவரைச்சீவன்முத்தர்களென்
றுரைத்திடப்படுவதெப்படியோ.

இ - ள். பிரார்த்த முடன்பாடென்று - தேகமுள்ளவரையிற் பிரார்த்த போகம்பொசித்தேயொழியவேண்டுமென்று,—எந்தநெறியும் பேசிடும் - சகல சமையசித்தாந்திகளும் உறுதியாகச்சொல்வார்கள்,—இந்நெறியதற்கு - இச்சுத்தமார்க்கத்துக்கு,—பிராரத்த முடையோர் - பிராரத்தானுபவ முண்டென்று ஒப்புக்கொள்பவர்கள் அருகரேயன்றும் - உரியரல்லவாம்,—பிராரத்தம் புசித்திடுவோர்கட்கு - பிராரத்தமுண்டென்றனுபவிக்கின்றவர்களுக்கு,—அறுதிந்தமாயாதனு கரணங்கள் - அந்தமாயாதனுவும் மாயாகரணமும் மாயாபோகமும் ஒருக்காலும் விட்டுநீங்கமாட்டாது,—அதனினல் - அதனு

லே,—சிவத்துவமதனையுறுது - சிவாத்வைத முத்தியை அடையமாட்டார்கள்,—அவரை - அப்படிப்பட்டவர்களை, — சீவன் முத்தர்களென்று - சீவன் முத்திநிலையை யடைந்தவர்களென்று, — உரைத்திடப்படுவதெப்படி - எப்படிசொல்லப்படும் என்க.

வி - ம். பிரணவமே தனுகரணபுவனபோகமாகவும் அருளேகரணபுவனபோகமாகவும்பெற்ற சீவன் முத்தரும் பரமுத்தரும் பிரணவபோகம் அருட்போகம் புசிக்கின்றவர்களேயல்லது அவர்கட்குப் பந்தான்மாக்களைப்போலப் பிராரத்தபோக மென்பது கிடையாது. ஆதலால் பிராரத்தமுடையோர் அருகரேயன்றும் என்றார். பிராரத்தமென்பது இன்றியமையாமையான பசி, தாகம், நித்திரை, மல சலவிசர்க்கம், சாரமரணம். இவைமுதலிய இச்சாயெத்தனமன்றி நிராபேட்சையாய் வரப்பட்டவைகளென்றும், சுகதுக்கானுபவமாய் இச்சாயெத்தனத்தோடும் அபேட்சித்துவரப் பட்டவிடைய போகங்களையெல்லாம் ஆகாமிய மென்றுசிலசுருதியார் அங்கீகரித்திருக்கின்றமையால் அதனுனுங்காண்க. உச

இவைக்கோர்திருட்டாந்தமுணர்த்துகின்றர்.

அன்னைதன்முலைப்பாலருத்திடும்பருவ
　　மகன்றப்பாற்பருவம்வந்ததற்பின்
அன்னைதன்முலைப்பாலருந்தவேண்டிடினு
　　மம்முலைவற்றியேயிடும்போற்
பின்னையின்போகம்புசித்திடும்பருவம்
　　பெயர்ந்தப்பாற்பருவம்வந்ததற்பின்
பின்னையின்போகம்புசிக்கவேண்டிடினும்
　　பிராரத்தநீங்கியேயிடுமால்.

இ - ள். அன்னைதன்முலைப்பால் - தாயினதுஸ்தன்னியத்தினின்று முண்டாகும்பாலை,—அருத்திடும்பருவமகன்று - புசி

க்குங்குழந்தைப்பருவம்நீங்கி,—அப்பாற்பருவம் வந்ததற்பின் - மேலெவ்வனப்பருவம் வந்தபின்பு அன்னைதன்முலைப்பால் - தாயினது முலைப்பால்,—அருந்தவேண்டினும் - புசிக்கவேண்டு மென்று முலைபிடித்துண்ணினும்,—அம்முலை வற்றியேயிடும் போல்-முன்னமேஅம்முலைவற்றிபோயிருக்கும் அதுபோல்,— பின்னையின்போகம் - பின்னுசத்தியான அசுத்தமாயா போக த்தை,—புசித்திடும் பருவம்-புசித்திருந்தசீவப்பருவமானது,— பெயர்ந்து - நீங்கி,—அப்பாற் பருவம் வந்ததற்பின்-மேற்பட்ட சீவன் முத்திபாமுத்திபருவம் வந்து நேரிட்டபின்பு,—பின்னை யின் போகம் புசிக்கவேண்டிடினும் - முன்போலும் பின்னுசத் தியான அசுத்தமாயாபோகத்தைப் புசிக்கவிரும்பினும்,—பிரா த்தநீங்கியேவிடுமால் - பிராரர்த்தமாய்வரும் அசுத்தமாயா போகம்நீங்கிப் போய்விடும் என்க. உரு

இந்தநல்லொழுங்கின்முன்னிருபதமு
மெய்தியிவ்வசிபதத்தடைந்தால்
பந்தமில்சிவத்தைவடிவொடுமடையும்
பகுத்தவையொன்றிலொன்றுதுங்கிச்
சந்ததந்தருக்கியசிபதத்தருத்தந்தனைத்
தத்தம்பதத்தினிலொடுக்கும்
அத்தகர்தமக்குமற்றொருக்காலு
மசிபதமுத்தியேகிடையா.

இ - ள். இந்த நல்லொழுங்கில் - இச்சுத்த மார்க்கத்திற் றத்துவமசியென்னும் பதத்துக்கு அருத்தங் கூறிய கிரமப் படிக்கு,—முன்னிருபதமுமெய்தி - முற்கூறிய தொம்பத தற் பதத்திற்குவிட்ட லக்கணைவிடா தலக்கணைப்படி அனுபவத்தை யடைந்து,—இவ்வசிபதத்தடைந்தால் - இச்சுத்தமார்க்கத்திற் சொல்லும் விட்டுவிடாதலக்கணைப்படி அசி பதார்த்தானு பவத்தை அடைவார்களாகில்,—பந்தமில் சிவத்தை - சகலபந் தங்களு நீங்கிய சிவாத்வைதத்தை,— வடிவொடுமடையும் -

இத்தேகத்தோடு மடைவார்கள், — பகுத்தவை - அத்தத்துவமசி வாக்கியத்துக்குத் தங்கள்தங்கள் கிரியாமார்க்கம் உபாசனை மார்க்கத்துக் கேற்பப் பொருள் பிரித்துக்கொண்டு,—ஒன்றிலொன்றொதுங்கி - ஒவ்வொரு சித்தாந்தங்களி லுறுதிகொண்டு நின்று,—சந்ததந்தருக்கி - எப்போதுந் தாங்கள் கொண்ட கொள்கையை யளவைப் பிரமாணங்களாற்ரூபித்து இதற்கு மேற்பட்ட உண்மை நிலை இல்லை யென்று மனச்செருக்குற்று,— அசிபதத்தருத்தந்தனை - அசிபதத்துக்குள்ள அருத்தத்தை தத்தம் பதத்தினிலொடுக்கும்,— தாங்கள் தாங்கள் கொண்ட பதார்த்தத்தினிடத்திலுண்டாயிருப்பதாகச் சேர்த்துச் சொல்லும்,—அந்தகர் தமக்கு - ஞான திஷ்டியின்றிய அவர்களுக்கு,— ஒருக்காலும் - எக்காலத்தினும் அசிபத முத்தியே கிடையா,— அசிபதார்த்த அங்க லிங்கைக்கியமான சிவாத்வைத முத்திகிடைக்கமாட்டாது என்க. ௨௯

௯ - ம் பாட்டு முதல் இப்பதினேண்பாட்டானுந் தத்துவமசியென்னு மகாவாக்கியத்துக்குப் பொருள்கூறியவாறு காண்க.

முத்தியிற்சிவமுமுயிரிரண்டாகின்
  முத்திசாயுச்சியமின்றாம்
முத்தியிற்சிவமுமுயிருமொன்றாகின்
  முத்தியேபெற்றவனின்றாம்
முத்தியிற்சிவத்துக்குயிரங்கமாயின்
  மொழிந்தமற்றவையுண்டாமதினன்
முத்தியிற்சிவமுமுயிருஞ்சையோக
  மொழியுந்தாதான்மியங்குறையே.

இ - ள். முத்தியில் - முத்தித்திசையில்,— சிவமு முயிரிரண்டாகில் - சிவமென்றும் சீவனென்றும் இருமுதலாக இருக்குமாயின்,—முத்திசாயுச்சியமின்றாம் - அவைநிற்குண

-சாயுச்சிய முத்தியல்லவாம்,—முத்தியில்-முத்தித்திசையில்,—சிவமு முயிருமொன்றாகின் - சிவமுஞ் சீவனும் ஏக முதலாக இருக்குமாயின்,—முத்தியே பெற்றவனின்றாம் - முத்திபெறுவானில்லையாய் முடியும்,— முத்தியில் - முத்தித்திசையில்,—சிவத்துக்குயிரங்கமாயின் - சீவன் சிவத்துக் கங்கமாயிருக்குமாயின்,— மொழிந்த மற்றவையுண்டாம் - மேற்கூறிய நிற்குண சாயுச்சியமான சிவாத்வைத முத்தியுண்டாம்,—அதனால் - அதனாலே,—முத்தியில் - முத்தித்திசையில்,—சிவமுமுயிரும் - சிவத்துக்கும் சீவனுக்கும்,—சையோக மொழியும்-சையோக சம்பந்தஞ்சொல்லுங் கிரியாமார்க்க முத்தி சித்தாந்தமும் தாதான்மியம் - தாதாத்மிக சம்பந்தஞ்சொல்லும் உபாசனமார்க்க முத்தி சித்தாந்தமும் ஆகிய விரண்டும்,—குறையே - நிற்குணசாயுச்சிய முத்தியல்லவாம்,—எ-று. மொழியுமென்ற பதத்தை யிரண்டிடத்துங் கூட்டுக.

வி - ம். அப்பிற்கலந்த வுப்புப்போல சிவசீவ சையோகஞ்சொல்லுங் கிரியா மார்க்கர்களுக்கு அப்புக்குணமு முப்புக்குணமு மொன்றுதலில்லை வேறுபட்டேயிருக்கும்ஆதலால் சிவமு முயிரிரண்டாகின் * முத்திசாயுச்சிய மின்றா மென்றார். சித்து பேதமான கூடஸ்த பிரம அயிக்கியமே முத்தியிலை யென்று தாதாத்மியசம்பந்தஞ் சொல்லும் வைதிகர்களுக்கு பெறுவா னில்லாமையால் முன்பே பேறுமின்றாய் முடியும், ஆதலால். முத்தியே பெற்றவனின்று மென்றார். அருளென்றுஞ் சிவமென்றும் இரண்டுமின்றி யொன்றுமின்றி சர்க்கரையும் ருசியும்போல அங்கலிங்க அயிக்கியானந்தமான நிற்குணசாயுச்சியத்தைச் சொல்லும் சிவாத்வைதிகளுக்கு நிற்குண சாயுச்சிய முத்தியிருத்தலால் மொழிந்தமற்றவை யுண்டா

* முத்தியில் துவைதம் சாதிப்பவர் சிவசமவாதிகள். சுத்தாத்துவித சித்தாந்தவைதிக சைவரன்று.

மென்றார். இதனானே முற்கூறிய இருவர்கட்கும் முத்திக் குறையே என்க. உஎ

சச்சிதானந்ததற்பரசிவமே
தனதுதன்னிலையிலேநிற்க
அச்சிதானந்தலீலையினாலே
யனேகமாய்ச்சராசரமாகிச்
சச்சிதானந்தமேயுடல்பொறிகட்குக்
கரணங்களாய்க்கொண்டே
அச்சிதானந்தலீலையினடித்தே
யடைந்திடும்பண்டையபடியே.

இ-ள். சச்சிதானந்த தற்பரசிவம் - சச்சிதானந்த அமிசத்தோடு தானாய் விளங்கும்பரசிவமானது, — தனது தன்னிலையிலே நிற்ப - தன்னுருவில் அணுவளவேனும் குறைவுபடாதிருந்த திருந்தபடியே யிருப்ப,—அச்சித்து - அச்சிவாங்கமான சிற்சத்தியானது,—ஆனந்தலீலையினாலே - தனது சுகானந்த லீலையால்,—அனேகமாய் - பலவிதமாய்,—சரம் - சரவுயிர்களாகவும்,— அசரமாகி - அசரவுயிர்களாகவும் தோன்றி,—சச்சிதானந்தமே - சத்துச்சத்தி சித்துச்சத்தி ஆனந்த சத்தியாகிய சத்திகளையே,—உடல் பொறிகட்குக் கரணங்களாய்க்கொண்டு - தேகேந்திரிய அந்தக் கரணங்களாகக் கொண்டு,—அச்சித்து - மேற்சொல்லிய சிவத்தினது சிற்சத்தியானது,— ஆனந்த லீலையின் - தனது சுகானந்த லீலையினாலே,—நடித்து - விளையாடல்செய்து, — அடைந்திடும் பண்டையபடியே - பழையபடிசிவாங்கமாகவே யிருக்கும் என்க.

வி-ம். சச்சிதானந்த லட்சண பரசிவம் இருந்த திருந்தபடியேயிருக்க அச்சிவத்துக்கு அங்கமாகவும் சம்வாயமாகவும் இருக்கும் சிற்சத்தியானது விலாசார்த்தமாய் விசிரிம்பித்தபோது தனது அந்தர் முகத்தாற் சிவமென்றும் பகிர்மு

கத்தால் ஆத்மாவென்றும் எண்பித்துக்கொண்டு இவ்வான்மாத்தன தெதார்த்தத்தை மறந்து பசுத்துவம் வசித்தபோது இச்சத்தி ஆணவமலமாகவும், அதுவேயப்பசுவுக்குத் தனுகரண புவனபோகமாகவும், இவ்வான்மா சீவத்துவம் வகித்தபோது இச்சத்தி மாயையாகவும் அதுவே இச்சீவனுக்கு தனுகரண புவனபோகமாகவும் இவ்வான்மா குருமுன்னிலையில் விசாரித்துச் சீவன் முத்தனானபோது இச்சத்தி பிரணவமாகவும், அதுவே அச்சீவன் முத்தனுக்குத் தனுகரண புவனபோகமாகவும், இவ்வான்மா பரமுத்தனானபோது இச்சத்தி அருளாகவும் அதுவே பரமுத்தனுக்குத் தனுகரண புவனபோகமாகவுமிருக்கும். அப்போது அச்சத்திபகிர் முகம்விட்டு அந்தர்முகப்பட்டுச் சமவாயமாய்ச் சிவத்துக்கு அங்கமாகவே யிருக்கும். ஆதலால் லீலையினடித்தே யடைந்திடும் பண்டையபடியே என்றார். ௨அ

ஏகமாயசையாத்தற்பரலிங்கம்
லீலையிற்சரமனேகமதாய்
மோகமாமிருளாயவ்விருளதனின்
மூடமாய்ச்சிறிதுநாளிருந்தும்
சோகமாமிந்தமருளதாயிதனிற்
றுவக்குண்டுசிறிதுநாணடித்தும்
பாகமாமோவாயதிற்சின்னாணடிந்தும்
பண்டுபோனின்றிடுமென்றே.

இ - ள். ஏகமாய் - ஒன்றாகவும்,—அசையா - சலிப்பற்றதாகவு மிருக்கின்ற,—தற்பரலிங்கம் - தானாய் விளங்கும் பரசிவமானது,—லீலையில் - தனது சுயலீலையினாலே,—சரமனேகமதாய் - சராசரமான எண்ணிறந்த வான்மவர்க்கங்களாகவும் மோகமாம் - மயக்கவடிவான,—இருளாய்,—ஆணவமலமாகவும்,—அவ்விருளதனில் - அவ்வாணவமலவிருளில்,—மூடமாய் - அறியாமையோடும்,—சிறிதுநாளிருந்தும் - சில

காலமிருந்தும்,—சோகமாமிந்த மருளதாய் - துக்கரூபமான இந்தமாயா சரீரமாகவும்,—இதனிற்றுவக்குண்டு - இந்தமாயாசரீரத்திற் கட்டுண்டு,—சிறிது நாணடித்தும் - சுவர்க்க நரகபூமிகளிற் சிலகாலஞ் சஞ்சரித்தும்,—பாகமாம் - பரிபாகத்தாலுண்டாகின்ற,—ஓவாய் - பிரணவமாகவும்,—அதிற் சின்னுணடித்தும் - சிலகாலம் அப்பிரணவ சரீரத்தோடு சஞ்சரித்தும்,—பண்டுபோ னின்றிடும் - முன்போல சலிப்பற்றிருந்தபடியே யிருக்கும், எ - று. அன்று - அசை.

வி - ம். சரமென்றமையால் அசரமென்று வருவிக்கப்பட்டது. ஆன்மா அருள்வடிவத்தும் இருள் வடிவத்தும் சலிப்பற்றும், மருள்வடிவத்தும் பிரணவவடிவத்தும் சஞ்சரிப்புற்றும், இருக்கு மென்பது கருத்து. அக்கினியும், உஷ்ணமும்போல சத்திக்கும் சிவத்துக்கும் வேற்றுமையின்மையால் சத்திலீலையைச் சிவலீலையாக அனுவதித்துக் கூறினர் என்க. உ௯

சலமதுதானேதிரண்டுப்பதாய்ச்
சலம்வந்துள்புகவந்தச்சலமாய்
நிலமதின்விளங்குமஃதினைப்போல
நிமலமாமருவருடானே
குலவுலீலையினூற்றிரண்டுருவாகிக்
கூறின்றிக்கூறதாய்நடித்தே
இலகன்மாத்திரமாய்நடித்துமுன்போலு
மிருந்திடும்பண்டையபடியே.

இ - ள். சலமதுதானே திரண்டுப்பதாய் - சலந்தானே தடித்து,—உப்பாய்ச்சலம் வந்துள்புக - அவ்வுப்பிற் கேதுவானசலம் மீண்டு மவ்வுப்பிற் பிரவேசிக்க,—அந்தசலமாய்ச் - பழையபடிச் சலமாகவே கரைந்து,—நிலமதின் விளங்கும் - இவ்வுலகத்திற் பிரகாசிக்கும்,—அஃதினைப்போல-அத்திருஷ்ட

த்தைப்போல,—நிமலமாமருவருடானே - நிருமலமாகவும்ரூப மாகவுமுள்ள அருள்தானே, — குலவுலீலையினுல் - விளங்கா நின்ற தனது ஸ்வயலீலையினுல்,— இரண்டுருவாகி - சித்துச் சடங்களாகத்தடித்து,—கூறின்றிக்கூறதாய் நடித்து - பலபிர காரமாய்ச் சஞ்சரித்தும்,—இலகன்மாத்திரமாய் - தோற்ரு மாத்திரமாய்,— நடித்து - சஞ்சரித்து,— முன்போலுமிருந் திடும் பண்டையபடியே - பழையபடி அருளாகவே கரைந் திருந்தபடியே யிருக்கும் என்க.

வி - ம். இருள்வடிவாகவும் மருள்வடிவாகவும் பிரணவ வடிவாகவும் அருள்வடிவாகவும் ஆங்காங்குப்பசுவாகவும் சீவ ஞகவும் சீவன் முத்தஞகவும் பரமுத்தஞகவும் அருள்தானே தடித்துக்கரைதலால் கூறின் றிக்கூறதாய்நடித்து என்ருர். ௩௦

சரமந்தவிருளிலிருந்திடுங்காலை
தனுமுதனன்குமவ்விருளாம்
சரமந்தமருளினடித்திடுங்காலை
தனுமுதனன்குமம்மருளாம்
சரமந்தவோவினடித்திடுங்காலை
தனுமுதனன்குமவ்வோவாம்
சரமந்தவருளிலிருந்திடுங்காலை
தனுமுதனன்குமவ்வருளாம்.

இ - ள். சரம் - ஆன்மாவானது,—அந்த விருளில் - அந்த ஆணவமலத்தில்,—இருந்திடுங் காலை - கட்டுண்டிருந்த காலத் தில்,—தனுமுதனன்கும் - தனுகரணபுவனபோக மாகிய நான் கும்,—அவ்விருளாம் - அவ்வாணவமலமேயாம்,—சரம் - ஆன் மாவானது,—அந்தமருளினடித்திடுங்காலை - அம்மாயா சரீரத் தையுற்றுச் சஞ்சரிக்குங்காலத்தில்,—தனுமுதனன்கும் - தனு கரண புவன போகமாகிய நான்கும்,—அம்மருளாம் - அம்மா யையேயாம்,—சரம் - ஆன்மாவானது,—அந்த வோவினடித்

திடுங்காலே - அப்பிரணவசரீரத்தையுற்றுச் சஞ்சரிக்குங்காலத்தில்,—தனுமுதனான்கும் - தனு கரண புவன போகமாகிய நான்கும்,—அவ்வோவாம் - அப்பிரணவமேயாம்,—சரம் - ஆன்மாவானது,—அந்த வருளிலிருந்திடுங்காலே - அவ்வருளிற் றாதான்மிய மடைந்திருந்த காலத்தில்,—தனுமுதனான்கும் - தனு கரண புவன போகமாகியநான்கும், — அவ்வருளாம் - அவ்வருளேயாம் என்க.

வி - ம். இருள்வடிவத்தும் அருள்வடிவத்துமாயா தத்துவக் கூட்டரவின்மையா லவையிரண்டிடத்து மான்மா இருந்திடும் என்றார். மருள்வடிவத்தும் பிரணவடிவத்துமாயா தத்துவக் கூட்டரவுண்டாயிருத்தலால் அவ்விரண்டிடத்து நடித்திடும் என்றார். ந௧

இருள்வடிவதுவுமருள்வடிவதனி
லெய்தியேமறைத்திடுமிந்த
மருள்வடிவதுவுமோவடிவதனின்
மறைந்திடுமோவடிவதுவும்
அருள்வடிவதனின் மறைந்திடுமந்த
வருள்வடிவதுவுமச்சிவத்தில்
தெருள்வடிவானசத்தியாய்முன்போற்
றிகழுமென்றறியுரைத்திடுமே.

இ - ள். இருள்வடிவதுவும் - சிருட்டிக்கு முன்னுள்ள ஆணவமலதனு வானது,—மருள்வடிவதனில் - சிருட்டியான மாயாவடிவில்,—எய்தியேமறைந்திடும் - அடங்கியிருக்கும்,—இந்த மருள்வடிவதுவும் - இம்மாயாவடிவமானது,—ஓவடிவதனில் மறைந்திடும் - பிரணவ வடிவத்தில்மறைந்திருக்கும்,—ஓவடிவதுவும் - அப்பிரணவ தனுவானது,—அருள் வடிவதனில் - அருட்டனுவில்,—மறைந்திடும்- மறைந்திருக்கும்,—அந்தவருள் வடிவதுவும் - அவ்வருட்டனுவானது,—தெருள்வடி

வான சத்தியாய் - விளக்கவடிவமான சிற்சத்தியாய்,—முன் போற் றிகழுமென்று - பழையபடி சிவாங்கமாகவே விளங்கி யிருக்குமென்று,—அசியுரைத்திடுமே - தத்துவமசி யென்னு மகாவாக்கியம் பிரதிவாதிக்கும், என்க.

வி - ம். மருட்டனுவடைந்த காலத்தும், பிரணவதனுவ டைந்தகாலத்தும், அருட்டனுவடைந்த காலத்தும், அவ்விருள் அவ்வவ்விடங்களிலும் அனுகூதமாகவே யிருக்குமென்கிற அனு பவ அபிப்பிராயத்தைப்பற்றி எய்தியே மறைந்திடுமென்றார். துன்பமே ஆன்மாக்களுக்கு இன்பத்தில் விருப்பத்தைப் பிரே ரிக்கின்றது. அதுபோல இருளிருந்தமையாற்றான் ஆன்மா விற்கு மருளிலும் பிரணவத்திலும் அருளிலும் சுகவிருப்பத் தைப்பிரேரிகரித்து செலுத்தியது. அங்ஙனமின்றேல் ஆன்மா அம்மூவித தனுவையடைய யெத்தனிக்காது. சூரிய உதைய மானபோது முன்னுள்ள விருள் அவ்வொளியில் அடங்கி யிருப்பதுபோல அருட்டனுவரையில் இருட்டனுவடங்கி இருக் குமென்பது கருத்து. எங்ஙனமெனின் ஆனந்தம் வரையில் ஆன்மாவிற்கு இச்சித்தேறும் எத்தனுனுபவமும் போதவாச னையுமிருத்தலானும் அங்கலிங்க அயிக்கியானந்தாதீதத்தில் ஆன்மாவிற்குப் போதவாசனையும் இச்சாயெத்தனமும் இழந் திருக்கின்ற அனுபவத்தைப்பற்றி அங்ஙனங் கூறினார் என்க.

அருளுறும்வடிவேமுன்னியல்பான்மா
வாணவவிருளுறுமன்றே
இருளுறுசுழுத்திவிழுங்கிடுமதனுக்
கிந்தமாயையின்சிருட்டியதாம்
மருளுறுக்னவுவிழுங்கிடுமதற்கு
வந்ததுபிரணவசிருட்டி
தெருளுறுமந்தப்பிரணவம்விழுங்கத்
திகழுமவ்வருட்சிருட்டியதே.

இ - ள். ஆன்மா - ஆன்மாவிற்கு,—அருளுறும் வடிவே - பொருந்திய அருட்டேகமே,—முன்னியல்பு - முன் சுபாவத்தி லுள்ளது,—ஆணவவிருளுறும் - ஆணவ மலமென்னுஞ் சுழுத் தியை யடைந்தது,—அன்றே - அநாதியே,— இருளுறுசுழுத் தியை - அவ்வாணவ விருளாகிய சுழுத்தியை,— விழுங்கிடுமத னுக்கு - கெடுப்பதற்கு,—இந்த மாயையின் சிருட்டியதாம் - சொப்பனமாகிய விம்மருட்டேக முண்டாயினவாம்,— மரு ளுறுகனவு - மருட்டேகமான சொப்பனத்தை,—விழுங்கிடு மதற்கு - கெடுப்பதற்கு,—வந்தது பிரணவ சிருட்டி - துரிய மாகிய பிரணவதேக முண்டாயின,—தெருளுறு மந்தப்பிரண வம் - துரியமாகிய வந்தப் பிரணவதேகத்தை,— விழுங்க - கெடுப்பதற்கு,— திகழுமவ்வருட் சிருட்டியதே - துரியாதீத மாகிய பழையவருட்டேக முண்டாயினவாம். இங்ஙனம் இரு ளைச் சுழுத்தியாகவும், மருளைச் சொப்பனமாகவுங் கூறினமை யால், பிரணவத்தைத் துரியமாகவும் அருளைத் துரியாதீதமாக வும் வருவிக்கப்பட்டது. சாக்கிரத்தின்கண்ணே இந்நான்கனு பவமுந் தோற்றவேண்டுதலால் சாக்கிரத்தை வேறுபிரித்துக் கூறினாரில்லை. ௩௩

இவைக்கோர் திருட்டாந்தமிட்டுணர்த்துகின்றார்.

மருள்வடிவதனினீங்குதலின்றி
　　மற்றுமோரறிவிலாக்குழந்தை
வெருவருங்குமாரந்தருணமூப்பென்றே
　　விளங்குதல்போலவான்மாவும்
அருள்வடிவதனினீங்குதலின்றி
　　யாணவமாயையோவருளாம்
பருவமற்றவையிலந்தந்தவடிவாய்ப்
　　பண்டுபோன்முடிவினின்றிடுமே.

இ - ள். மருள்வடிவதனின் - இம்மாயாதேகத்தி னின் றும்,—நீங்குதலின்றி - நீங்காதிருந்துகொண்டே,—ஓரறிவி

லாக்குழந்தை - விவேகமின்றிய வோர் குழந்தையானது,—வெருவருங்குமாரம் - அச்சமுறத்தக்க குமாரப்பருவம்,—தருணம் - எவ்வனப்பருவம்,—மூப்பு - வார்த்திகப்பருவம் ஆகிய பருவபேதத்தை யடைந்து,— விளங்குதல்போல - விளங்கியிருத்தல்போல,—ஆன்மாவும் - ஆத்மாவும்,—அருள்வடிவதனில் - அருட்டேகத்தினின்றும்,— நீங்குதலின்றி - நீங்காதிருந்துகொண்டே,—ஆணவம் - ஆணவமலமென்னும் இருட்டேகத்தினும்,—மாயை - மருட்டேகத்தினும்,—ஓ - பிரணவதேகத்தினும்,— அருளாம் - அருட்டேகத்தினும்,— பருவம் - பசு, சீவன், சீவன்முத்தன், பரமுத்தன் என்னும் பருவபேதத்தையடைந்து,— மற்றவையில்-இருள் - மருள் - பிரணவம் - அருள்-ஆகியவைகளில்,— அந்தந்தவடிவாய் - அந்தந்ததேகமாயிருந்து,—பண்டுபோல் முடிவினின்றிடும் - கடையில் பழையபடி அருள்வடிவாகவே விளங்கியிருக்கும் என்க. ௩௪

இருளினிற்பகுப்பின்றியசடமயமா
மிம்மருளுதையமதாகின்
உருவதாம்பஞ்சபூதமேமயமா
மோரொளியுதையமதாகின்
உருவருபஞ்சாக்கரமதேமயமா
மோங்கருளுதையமதாகின்
அருவதாம்பஞ்சசத்தியேமயமா
மாருயிர்வடிவமென்றுணர்வாய்.

இ - ள். ஆருயிர் - ஆன்மாவினது,—வடிவம் - சரீரமானது,— இருளினில் - ஆணவ தேகத்திற் கட்டுண்டிருந்தபோது,—பகுப்பின்றியசடமயமாம் - பகுப்பறிவின்றிய அறியாமையே வடிவமாகயிருக்கும்,— இம்மருளுதையமதாகின்-இம் மாயாதேகம் வந்துநேரிட்டபோது,—உருவதாம் பஞ்சபூதமே மயமாம் - உருவமாகிய பிருதிவியாதி பஞ்சபூதமேவடிவமாக

விருக்கும்,— ஓ வொளியுதையமதாகின் - பிரகாசியாநின்ற பிரணவதேகம்வந்து நேரிட்டபோது,— உருவருபஞ்சாக்கரம தேமயமாம் - ரூபாரூபமாகிய நமாதி பஞ்சாக்கரமே வடிவ மாகயிருக்கும்,—ஓங்கருளுதையமதாகின் - மேலான அருட் டேகம்வந்து நேரிட்டபோது,—அருவதாம் பஞ்ச சத்தியே மயமாம் - அருபமாகிய ஆதிசத்திமுதலிய பஞ்சசத்தியே வடி வமாகயிருக்கும்,—என்றுணர்வாய் - என்றறிவாயாக்கினன்க.

வடிவதிவ்விருளதாய்நிற்குங்காலே
மன்னுயிர்பசுவதாய்நிற்கும்
வடிவதிம்மாயையாய்நிற்குங்காலே
மன்னுயிர்சீவனாய்நிற்கும்
வடிவதிவ்வோவதாய்நிற்குங்காலே
மன்னுயிர்சீவன்முத்தனுமாம்
வடிவதிவ்வருளதாய்நிற்குங்காலே
மன்னுயிர்பரமமுத்தனுமாம்.



இ - ள். வடிவதிவ் விருளதாய் நிற்குங் காலே - சிருட் டிக்குமுன் ஆணவமலந் தேகமாயிருந்தபோது,—மன்னுயிர் பசுவதாய்நிற்கும் - நிலைபெற்றவான்மா பசுவெனப் பெயர் பெற்றுநிற்கும்,—வடிவதிம் மாயையாய்நிற்குங்காலே - சிருட் டியில் மாயை தேகமாயிருந்தபோது,—மன்னுயிர் சீவனாய் நிற்கும் - நிலைபெற்றவான்மா சீவனெனப்பெயர் பெற்றிருக் கும்,—வடிவதிவ்வோவதாய் நிற்கும் காலே - பிரணவதேக மாயிருந்தபோது,—மன்னுயிர்சீவன் முத்தனுமாம் - நிலைபெற் றவான்மா சீவன் முத்தனெனப் பெயர்பெற்றிருக்கும்,— வடிவதிவ்வருளதாய் நிற்குங்காலே - அருள் தேகமாயிருந்த போது,—மன்னுயிர் பரம முத்தனுமாம் - நிலைபெற்றவான்மா பரமுத்தனெனப் பெயர்பெற்றிருக்கும் என்க. ருசா

இச்செய்யுளால் ஆன்மாவிற்த அவத்தாநாமம்
வந்தவாறுகாண்க.

இருளூறுபசுவதாய்நிற்குங்காலை
யிருளதுவாகியேநிகழும்
மருளூறுசீவனாய்நிற்குங்காலை
மருளதுவாகியேநிகழும்
தெருளூறுமோவின்முத்தனுங்காலைத்
தெருள்பிரணவமதாய்நிகழும்
அருளூறுபரமமுத்தனுங்காலை
யருளதாய்நிகழுமவ்வருளே.

இ - ள். இருளூறு பசுவதாய் நிற்குங்காலை - ஆன்மா ஆணவமலத்தில் பசுத்துவம் வகித்து நின்றகாலத்து,—இருளதுவாகியே நிகழும்,—அருள் ஆணவமலமாகவிருக்கும்,—மருளூறுசீவனாய் நிற்குங்காலை - ஆன்மாமாயையின் சீவத்துவம் வகித்து நின்றகாலத்து,—மருளதுவாகியே நிகழும் - அருள் மாயையாயிருக்கும்,—தெருளூறுமோவின் முத்தனுங்காலை - ஆன்மா தெளிவுபொருந்திய பிரணவத்தில் சீவன் முத்தத்துவம் வகித்து நின்றகாலத்து,—தெருள்பிரணவமதாய் நிகழும் - அருள்தெளிவுபொருந்திய பிரணவமாகவிருக்கும்,—அருளூறு பரமமுத்தனுங்காலை - ஆன்மா அருளிற் பரமுத்தத்துவம் வகித்து நின்றகாலத்து,—அருளதாய்நிகழுமவ்வருளே - அவ்வருள் அருளாகவேவிளங்கியிருக்கும் என்க. ௩௭

இச்செய்யுளால் அருளுக்குப்பரியாயநாமம்
வந்தவாறுகாண்க.

இருளதுவாகிநிகழ்ந்திடுங்காலை
யிரும்பதியாகியேநிகழும்
மருளதுவாகிநிகழ்ந்திடுங்காலை
மகபரமாகியேநிகழும்

தெருள்பிரணவமாய்நிகழ்ந்திடுங்காலைச்
சிவலிங்கமாகியேநிகழும்
அருளதுவாகிநிகழ்ந்திடுங்காலை
யச்சிவமாகுமச்சிவமே.

இ - ள். இருளதுவாகிநிகழ்ந்திடுங்காலை - அருள் ஆணவமலமாகவிளங்கிய காலத்து,—இரும்பதியாகியே நிகழும் - சிவம்பதியெனப் பெயர்பெற்றிருக்கும்,—மருளதுவாகி நிகழ்ந்திடுங்காலை - அருள்மாயையாகவிளங்கிநின்றகாலத்து,—மக பரமாகியேநிகழும் - சிவமேலானபரனெனப் பெயர் பெற்றிருக்கும்,—தெருள்பிரணவமாய் நிகழ்ந்திடுங்காலை - அருள்பிரணவமாகவிளங்கி நின்றகாலத்து,—சிவலிங்கமாகியே நிகழும் - சிவம் சிவலிங்கமெனப்பெயர்பெற்றிருக்கும்,—அருளதுவாகி நிகழ்ந்திடுங்காலை - அருள்அருளாக விளங்கிநின்றகாலத்து,—அச்சிவமாகுமச்சிவமே - அச்சிவம் சிவமாகவே விளங்கியிருக்கும் என்க. ரு௮

இச்செய்யுளால் சிவத்துக்குப்பரியாயநாமம் வந்தவாறு காண்க.

அரியவவ்வருளேமூன்றியல்பதுவு
மைந்துநற்குறியுமாய்நிகழும்
இரியுதலில்லாச்சத்தையாய்ச்சித்தா
யின்பமாய்நிற்குதலியல்பாம்
கிரியையுஞானமும்மிச்சையதுவுங்
கிளர்திரோதையும்பரையதுவும்
உரியதுகுறியாம்விரியிலையைந்தா
யொடுங்கிடிலொன்றதாய்நிற்கும்.

இ - ள். அரிய வவ்வருளே - அரிதாகிய வவ்வருள்தானே,—மூன்றியல்பதுவும் - மூன்றுசுபாவமும்,—ஐந்துநற்குறியுமாய் நிகழும் - ஐந்தடையாளத்தோடும் விளங்கியிருக்கும்,—இரியுதலில்லாச்சத்தையாய் - கெடுதலின்றியசத்தாக

வும்,—சித்தாய் - சித்தாகவும்,—இன்பமாய் - ஆனந்தமாக வும்,—நிற்குதலியல்பாம் - இருத்தலேயவ்வருளுக்குச் சுபாவ மாம்,—கிரியையும் - கிரியாசத்தியும்,—ஞானமும் - ஞானசத்தியும்,—இச்சையதுவும் - இச்சாசத்தியும்,—ஙிளர்திரோதையும் - விளங்காநின்ற ஆதிசத்தியும்,—பரையதுவும் - பராசத்தியும் ஆகியபஞ்சசத்திகளே,—உரியதுகுறியாம் - அவ்வருளுக்குரியவடையாளங்களாம்,—விரியிலையைந்தாய் - காரியத்தால்விரியும்போது இருபத்தைந்து பிரகாரமாகவும்,—ஒடுங்கிடில் - காரணமாயொடுங்குங் காலத்து,—ஒன்றதாய் நிற்கும் — ஒருபொருளாகவேயிருக்கும் என்க. ௩௬.

பிரணவமதுமூன்றியல்பதுவும்
பிறங்குமைங்குறியுமாய்நிகழும்
திரமுறுமவ்வுமுவ்வுமவ்வதுமாய்த்
திருந்தவேநிற்குதலியல்பாம்
உரமுறுநவ்வுமவ்வுமச்சிய்யு
மோங்கியவவ்வும்யவ்வதுவும்
விரவுறுகுறியாம்விரியிலையைந்தாய்
மேவிடிலொன்றதாய்நிற்கும்.

இ - ள். பிரணவமதுவும் - பிரணவமும்,—மூன்றியல்பதுவும் - மூன்று சுபாவமும்,—பிறங்குமைங்குறியுமாய் நிகழும் - பிரகாசியா நின்ற வைந்தடையாளத்தோடும் விளங்கும்,—திரமுறும் - நிலைபெற்ற,—அவ்வும் - அகரமும்,—உவ்வும் - உகரமும்,—மவ்வுமாய் - மகரமுமாக,—திருந்தவே நிற்குதலியல்பாம் - செவ்வையாக விளங்கி யிருத்தலே சுபாவமாகும்,—உரமுறு நவ்வும் - திடம்பொருந்திய நகரமும்,—மவ்வும் - மகரமும்,—சிய்யும் - சிகரமு,—ஓங்கியவவ்வும் - மேலானவகரமும்,—யவ்வதுவும் - யகரமும்,—விரவுறுகுறியாம்—பொருந்திய வடையாளங்களாம்,—விரியிலையைந்தாய் - காரி

யத்தால் விரியும்போது இருபத்தைந்து பிரகாரமாம்,—மேவி டிலொன்றதாய் நிற்கும் - காரணமாயொடுங்கி நிற்குங் காலத் துவொரு பொருளாகவே யிருக்கும் என்க. சO

மருளுறுமாயையதுவுமூன்றியல்பும்
வகுக்குமைங்குறியுமாய்நிகழும்
உருவுறுதமசுரசசுசத்துவமா
யொன்றியேநிற்குதலியல்பாம்
பிருதிவியுஞ்சலமுமனலதுவும்
பெருகியவாயுவும்வானும்
வருகுறியாகும்விரியிலையைந்தாய்
வந்தொடுங்கிடிலொன்றாய்நிற்கும்.

இ - ள். மருளுறு மாயையதுவும் - மயக்கத்தைச் செய் யும் மாயையும்,—மூன்றியல்பும் - மூன்றுசுபாவமும்—,வகுக் குமைங் குறியுமாய் நிகழும் - சொல்லப்பட்ட வைந்தடையா ளத்தோடும் விளங்கும்,—உருவுறு தமசு - தேகோற்பத்திக் கேதுவான தாமதம்,—ரசசு - ராசதம்,—சத்துவம் - சாத்து விதமாகவும்,—ஒன்றியே நிற்குதலியல்பாம்-பொருந்தி யிருத் தலே சுபாவமாகும்,—பிருதிவியும் - பிருதிவியும்,—சலமும் - அப்பும்,—அனலதுவும் - அக்கினியும், — பெருகிய வாயுவும் - வீசாநின்ற வாயுவும், — வானும் - ஆகாயமும்,—வருகுறியா கும் - உண்டான அடையாளங்களாம்,—விரியிலையைந்தாய் - காரியத்தால் விரியும்போது இருபத்தைந்து பிரகாரமாக வும்,—வந்தொடுங்கிடி லொன்றாய் நிற்கும் - காரணமாயொ டுங்குங் காலத்துவொரு பொருளாகவே யிருக்கும் என்க. சக

ஐந்துநற்குறியுமூன்றியல்பதுவு
மாகியவருளதேயருவாம்
ஐந்துநற்குறியுமூன்றியல்பதுவு
மாகியவோவருவுருவாம்

ஐந்துநற்குறியுமூன்றியல்பதுவு
மாகியமாயையேயுருவாம்
ஐந்துநற்குறியுமூன்றியல்பதுவு
மாகியவிவற்றினூனுளவாம்.

இ - ள். ஐந்துநற்குறியும் - ஐந்தடையாளத்தையும், — மூன்றியல்பதுவும் - மூன்று சுபாவத்தையும், — ஆகியவருளதே - உடைத்தானவருளே,—அருவாம் - அரூப வடிவமாம்,— ஐந்துநற்குறியும் - ஐந்தடையாளத்தையும்,—மூன்றியல் பதுவும் - மூன்று சுபாவத்தையும், — ஆகிய - உடைத்தாகிய,— ஓவருவுருவாம் - பிரணவமானது அருவாவுருவ வடிவமாம்,— ஐந்துநற்குறியும் - ஐந்தடையாளத்தையும், — மூன்றியல்பதுவும் - மூன்றுசுபாவத்தையும்,—ஆகிய மாயையே யுருவாம் - உடைத்தாகிய மாயையே யுருவவடிவமாகும்,—ஐந்துநற் குறியும் - ஐந்தடையாளத்தையும்,—மூன்றியல் பதுவும் - மூன்று சுபாவத்தையும்,—ஆகிய விவற்றினூனுளவாம் - உடைத்தான இவ்வருள் பிரணவம் மாயையினிடத்து உருவம் அருவாவுருவம் அருவமாகிய பொசிப்புக்களு முண்டாம்.

வி - ம். இருள் சிருஷ்டிக்கு முன்னுள்ள தாகையால் அதற்குக் காரிய காரண சுபாவமும் குறியுங் கூறினாரில்லை.

உருவமாமுணவேயெதிரதாமுபய
முளத்தினிலுருசிமாத்திரமாம்
அருவமாமுணவேதிருத்திமாத்திரமா
யறிவினில்விளங்கிடுமெந்த
உருவமாமுணவேசிவருக்குறித்தா
முபயமிம்முத்தருக்குறித்தாம்
அருவமாமுணவேபம்முத்தருக்குறித்தா
மெனவசியுளாத்திடுமே.

இ-ள். உருவமாமுணவு - உருவமாகிய மாயாபுசிப்பானது,—எதிரதாம் - இந்திரியக் காட்சியான நாமரூபமாக விளங்கும்,—உபயம் - உருவாருவமாகிய பிரணவப் புசிப்பானது—,உளத்தினிலுருசி மாத்திரமாம் - மனதினிடத்தில் உருசிமாத்திரமாக விளங்கும்,—அருவமாமுணவு - அரூபமாகிய வருட்புசிப்பானது,—திருத்திமாத்திரமா - திருத்தி மாத்திரமாக,—அறிவினில் விளங்கும் - அறிவினிடத்தில் விளங்கும்,—அத்தவுருவ மாமுணவு - முற்கூறிய இந்திரியக் காட்சியான நாமரூபமாக விளங்கும் உருவமாகிய மாயா புசிப்பானது,—சீவருக்குறித்தாம் - சீவர்களுக்குரியதாக விருக்கும், — உபயம் - மனதினிடமாக விளங்கும் உருவாருவமாகிய பிரணவப் பொசிப்பானது,—இம்முத்தருக் குரித்தாம் - சீவன்முத்தருக் குரியதாக விருக்கும், — அருவமாமுணவு - அறிவினிடமாக விளங்கும் அருட்புசிப்பானது,—அம்முத்தருக் குரித்தாமென-பரமுத்தர்களுக் குரித்தாயிருக்கு மென்று,—அசியுரைத்திடுமே - தத்துவ மசியென்னும் மகாவாக்கியம் பிரதிபாதிக்கும்.

உருவமாமுணவாலுருவமாமுபய
வுணவினாலுபயமேமயமாம்
அருவமாமுணவாலருவமேமயமா
மச்சிவாங்கிசன்வடிவதுவே
உருவமாமுணவாற்சீவனுமுபய
வுணவினாற்சீவன்முத்தனுமாம்
அருவமாமுணவாற்பரமமுத்தனுமா
மச்சிவாங்கிசனுயிரதுவே.

இ-ள். உருவமாமுணவால் - உருவமாகிய மாயாபுசிப்பினால்,—உருவமாம் - உருவமாகிய மாயையே தேகமாக விளங்கும்,—உபயவுணவினால் - உருவாருவ மாகிய பிரணவ புசிப்பினால்,—உபயமே மயமாம் - உருவாருவ மாகிய பிரணவமே

தேகமாக விளங்கும்,—அருவமாமுணர்வால் - அருவமாகியவ் ருட் புசிப்பினல்,—அருவமே மயமாம் - அருவமாகிய வருளே தேகமாக விளங்கும், — அச்சி வாங்கிசன் வடிவது - சிவாங் கிசனகிய அவ்வாத்மாவின் றேகமானது, — உருவமாமுண வால் - உருவமாகிய மாயாபோகம் புசிக்கின்றதனல்,—சீவ னும் - சீவத்தன்மையுண்டாகும், — உபயவுணவினல் - உருவா ருவமாகிய பிரணவாமிர்தபோகம் புசிக்கின்றதனல்,—சீவன் முத்தனுமாம் - சீவன்முத்தத்தன்மை யுண்டாகும்,—அருவமா முணவால் - அருவமாகிய அருட்போகம் புசிக்கின்றதனல்,— பின்முத்தனுமாம் - பரமுத்தத்தன்மை யுண்டாகும்,—அச்சி வாங்கிசனு யிரது - சிவாங்கிசனகிய அவ்வாத்மாவுக்கு என்க.

வி - ம். சமவாயமாய் விளங்கும் சிற்சத்தியினது அந்தர் முகமே சிவமென்றும், பகிர்முகமே யாத்மாவென்றும் விளங் கலாலும் அச்சத்தி சிவதுக் கங்க மாதலாலும் ஆத்மாவை யீண்டு சிவாங்கிசனென்றார். உருவம் உருவாருவம் அருவமா மாயாதனு பிரணவதனு அனுட்டனு ஆகியதனுக்களுக்கு அங்க ங்கு அப்போ தப்போது உயிராய்நின்றருசி திருத்தியா கிய மாயாபோகம் அருட்போகங்களைப்புசித்திருத்தலால் சிவா ங்கிசனகியவாத்மாவை யீண்டு உயிரென்றார். இச்செய்யுளால் அந்தந்த அவத்தைகடோறும் ஆத்மாவுந்தேகமு மிருக்குமெ ன்று கூறியவாறு காண்க. சச

அன்னியதசையையருந்துதன்மனிதர்க்
கடாதுமற்றதையருந்திடுவோர்
அன்னியமிருகாதிகளெனவறைய
லாகுமற்றதின்சிவாங்கிசரும்
அன்னியமாயாவுணவருந்திடுத
லடாதுமற்றதையருந்திடுவோர்
அன்னியமாயாசகிதசீவர்களென்
றறைந்திடலாகுமென்றுணர்வாய்.

இ - ள். அன்னிய தசையை - நிஷேத புசிப்பாகிய மிருக பட்சியாதியின் மாமிசாதிகளை,—அருத்துதல் - புசிப்பது,— மனிதர்க்கடாது - உத்கிருஷ்டமான மனிதர்களுக்குத் தகா து,—மற்றதை யருந்திடுவோர் - அம்மாமிசாதி புசிப்புகளைப் புசிக்கின்றவர்கள், — அன்னிய மிருகாதிகளென வறைய லாகும் - நிக்கிருஷ்டமான மிருகபட்சியாதி சீவசெந்துக்க ளென்று சொல்லப்படும்,—அதின் - அதைப்போல,—சிவாங் கிசரும் - சிவாங்கிசராகிய ஆன்மாக்களும்,—அன்னிய மாயா வுணவருந்திடுதல்-நிக்கிருஷ்டமான மாயாபோகத்தைப் புசிப் பது,—அடாது - தகாது,—மற்றதையருந்திடுவோர் - அம்மா யாபோகப் புசிப்பைப் புசிக்கின்றவர்கள், — அன்னிய மாயா சகிதசீவர்களென்று - மாயா சம்பந்தர்களான நிக்கிருஷ்ட மிருகபட்சியாதி சீவர்களென்று, — அறைந்திட லாகுமென் றுணர்வாய் - சொல்லப்படுமென்றறிவாயாக என்க.

வி - ம். சஙு-வது செய்யுளில் அருள்தானே யிருளாக வும் மருளாகவும் பிரணவமாகவுமிருந்த தென்று சொல்லி, ஈண்டுமாயையை அந்நியமென்றும் நிக்கிருஷ்டமென்றும் அப் போகத்தை நிக்கிருஷ்டபோகமென்றுங் கூறியதேதென்னில், நாவுங் குய்யமுந் தேகமொன்றுயிருந்தும் தான பேதத்தால் அங்கங்குண்டான நீரை உத்கிருஷ்டமாகவும் நிக்கிருஷ்டமா கவுங்கொள்வதுபோல, மாயையை அன்னியமாகவும் அப்புசிப் பைநிக்கிருஷ்டமாகவும் கொள்ளப்பட்டது. அசுத்தமாதலால் மாயையை அந்நியமென்றார். வேதாகமங்களில் விதிநிஷேதங் கள் உத்கிருஷ்டதேகிகளான மனிதருக்குச் சொன்னதன்றி நிக்கிருஷ்டதேகிகளான மிருகபட்சியாதிகளுக்குச் சொன்ன தல்ல, ஆதலால் அவைகளைப் புசிப்பவர்களை அந்நியமிருகாதிக ளென்றார்.

சஙு

அசுத்தவிவ்வுணவைப்புசித்திடுமளவு
மச்சுத்தாவத்தையைநீங்கி
அசுத்தவத்தையினைவிழுங்கிடுஞ்சுத்த
வவத்தைவந்தடைதலேயிலையாம்
அசுத்தவிவ்வுணவைச்சுத்தமதாக
வகத்தினிற்பாவனைசெய்தால்
அசுத்தவின்னினைவைநீங்கியன்னினைவை
யகத்தினிற்பொருந்தியேநிற்கும்.

இ - ள். அசுத்தவிவ்வுணவை - அசுத்தமாகிய விம்மாயாபோகத்தை,—புசித்திடுமளவும் - புசிக்குங்காலவரையில்,—அச்சுத்தாவத்தையை நீங்கி - சுத்தாவத்தையாகிய அவ்வருளவத்தை நீங்கினவனேயாம்,—அசுத்தவத்தையினை - அசுத்தமாகிய கேவலசகலாவத்தையை,—விழுங்கிடும் - கெடுக்கத்தக்க,—சுத்தவவத்தை - அவனுக்குச்சுத்தாவத்தையாகிய அருளவத்தையானது,—வந்தடைதலேயிலையாம் - வந்தடைகின்றதேகிடையாது,—அசுத்தவிவ்வுணவை - அசுத்தமாகியவிம்மயாபோகத்தையே,—சுத்தமதாக - சுத்தமானதிருவருட் புசிப்பாக,—அகத்தினிற்பாவனைசெய்தால் - மனதிற்றிடபாவனைசெய்வானாகில்,—அசுத்தவின்னினைவை நீங்கி - இம்மாயாபோகத்தைப்பற்றி யெழும் அசுத்தமானதைக்கரைத்து,—அன்னினைவை - சுத்தமான அவ்வருட்போகத்தைப் புசிக்கத்தக்க சுத்தமனமானது,—அகத்தினிற்பொருந்தியே நிற்கும் - உள்ளேயடைந்திருக்கும் என்க.

வி - ம். இருளவத்தை மருளவத்தை ஆகிய இரண்டும் பெத்தத்திசையாதலானும், பிரணவாவத்தை அருளவத்தையாகிய இரண்டும் முத்தித்திசையாமாகலானும், மருளவத்தையில் இருளவத்தையையும் அருளவத்தையில் பிரணவாவத்தையும் ஒடுக்கி ஈண்டு மருளை அசுத்தாவத்தை யென்றும் அருளை சுத்தாவத்தையென்றும் கூறினர். முன் அசுத்தமாகவும்

வெறுப்பாகவும் நிக்கிரகித்த அவுஷதாதி புசிப்புகளை வியாதி காலபேதத்தால் அதனையே சுத்தமாகவும் விருப்பாகவும் அங்கீகரித்துப் புசிக்கின்றதுபோல, முன் அசுத்தமாயாபோகமே இப்போது ஆன்மாவினது பக்குவ காலபேதத்தால் அவை சுத்தமான அருட்போகமாம் என்பது கருத்து. அகத்தினிற் பாவனை செய்தாலென்றதற்கு உ-ம். சித்தியார். "மாயை மாமாயை மாயாவருமிரு வினையின் வாய்மை, ஆயவா ருயிரின்மேவு மருளெனி லிருளாய் நிற்கும், மாயைமா மாயை மாயாவரு மிருவினையின் வாய்மை, ஆயவா ருயிரின் மேவு மருளெனி லொளியாய் நிற்கும்" என்பது காண்க. சரு

திரிவிதகுணத்திற்றாமதமோகந்
 திகழுமிராசதமிராகம்
உரியசத்துவமேஞானமதாகு
 முலகிலிம்முக்குணவுணவே
விரியுமற்றவையிலெவைபுசித்ததுவோ
 விளங்கிடுமக்குணமல்லால்
அரியசுத்தவத்தையடைவதேயிலையவ்
 வவத்தைவந்துறும்வகைகேட்பாய்.

இ-ள். திரிவிதகுணத்தில் - தாமதராசத சாத்விதமாகியமுக்குணத்தில்,—தாமதமோகம்,—தாமதகுணமானது காமத்தைவிருத்திசெய்யும்,—இராசதமிராகம் - இராசதகுணமானது இச்சையை விருத்திசெய்யும்,—உரியசத்துவம் - முத்திக்குரியசாத் வீகுணமானது,—ஞானமதாகும் - ஞானத்தைவிருத்திசெய்யும்,—உலகிலிம்முக்குணவுண வேவிரியும் - இங்ஙனஞ்சொல்லிய முக்குணம்ச மானபுசிப்புகளே உலகத்தில்நிறைந்திருக்கும்,—மற்றவையில் - அப்புசிப்பில்,—எவைபுசித்ததுவோ - எந்தகுணம்சப் புசிப்பைப் புசிக்கின்றார்களோ - விளங்கிடுமக்குண மல்லால் - அக்குணமே அவர்களுக்கு மேலுமேலும்விளங்கிவருமல்லது,—அரியசுத்தவத்தையடைவதேயிலை -

அரிதான சுத்தாவத்தை வந்தடைகின்றதே கிடையாது,—அவ்வவத்தை - அந்தச்சுத்தாவத்தையானது, — வந்துறும்வகை கேட்பாய் - வந்தடைகின்ற உபாயத்தைச்சொல்லு வோங் கேட்பாயாக என்க.

வி - ம். அசுத்தமான கேவல சகலாவத்தைகளை ஆன்மாக்களடைதல் சாதாரணம். சுத்தாவத்தையானது பக்குவர்களது மிகுந்தஅப்பியாச முயற்சியாலடைய வேண்டுவ தாதலால் சுத்தாவத்தையையரிய தென்றார். ௭௬

அன்னைதன்வயற்றிற்புசித்தவக்குணமா
யாக்கையும்பொறியுமம்மனமும்
மன்னிடும்பினுமப்புசிப்பின்மேன் மிகவும்
வாஞ்சையுற்றருந்தியேமேலும்
உன்னலும்பொறியுமுடலுமிம்மூன்று
மொத்திடுமெனத்தெளிந்துணர்ந்து
தன்னதுள்ளவையிலுருசிதிருத்தி
தனில்வைராகமேயாகும்.

இ - ள். அன்னை - மாதாவானவள்—தன்வயிற்றில் - தன்வயிற்றிற் கருப்பந்தங்கிய காலத்து—புசித்தவக்குணமாய் - எந்தக்குணப் புசிப்பை விரும்பிப்புசித்தாளோ வக்குண சம்பந்தமாகவே—ஆக்கையும் பொறியு மம்மனமும் - தேகமும் இந்திரியமும் மனமும்,—மன்னிடும் - அச்சிசுவுக்கு அக்குண சம்பந்தமாகவே விர்த்திக்கும்,—பினும்-பிறந்தபின்பும்,—அப்புசிப்பின்மேல் - அச்சிசுவுக்கு அக்குண சம்பந்தமான புசிப்பிற்றனே,—மிகவும் வாஞ்சையுற்றருந்தி-மிகவும் அபேட்சையுற்றுப் புசித்து, — மேலும் - பின்னும், — உன்னலும் - மனதினிடத்தும்—பொறியும் - இந்திரியத்தினிடத்தும்,—உடலும் - தேகத்தினிடத்தும்,—இம்மூன்றுமொத் திடுமென - இம்மூன்றிடத்தும் அக்குண சம்பந்தமே மிஞ்சியிருக்குமென்று,—தெளிக்

துணர்ந்து - விசாரித்தறிந்து,—தன்னதுள்ளவையில் - தனக்குவந்து கிடைத்த புசிப்புக்களி லுண்டான,—உருருசி திருத்தி - சீவனுக்குரிய தாமத குணம்சமானு உருவத்தையும், சீவன் முத்தனுக்குரிய இராசத குணம்சமான ருசியையும், பர முத்தனுக்குரிய சத்துவ குணம்சமானதிருத்தியையும் பிரித்துணர்ந்து,—தனில் - அப்புசிப்புக்களில்,—வைராக்கியமே யாகும் - சுத்தாவத்தை யடையத்தக்க சத்துவகுணப் புசிப்பைப்புசித்து மற்றைய குணப்புசிப்பை வைராக்கியத்துடனே நீக்கவேண்டும் என்க.

வி - ம். அன்னைதன் வயிற்றிற் புசித்தவக்குண மாயாக்கை என்பதற்கு உ-ம். சிவதருமோத்தரம் – சுக்கில மதிகமாயினுணெனு முருவந்தோன்றும், சுக்கிலங் குறையிற் பெண்ணுஞ் சுரோணிதந்தொலையொப்பாகிற், சுக்கிலத்தலிதான்முன்றுந் தோய்ந்தவவ் விருவர்பாலும், எக்குணம் விளங்குமக் கட்பாலுமக் குணமேயேயும். என்பதுகாண்க. இச்செய்யுளில் உருசி திருத்திதனில் வைராகமே யாகுமென்று பொதுவாகக் கூறியிருப்ப ஈண்டு தாமத இராசதகுணப் புசிப்பை நீக்கிச் சத்துவகுணப் புசிப்பைப் புசிக்க வேண்டுமென்று பிரித்துக் கூறியதே தென்னில், விகற்ப நிட்டை நிருவிகற்ப நிட்டைகளை முன்னரனுட்டித்து நீங்கிப்பின் சகச நிட்டையை அனுட்டிக்குங் காலத்து அவ்விரு விதகுணப் புசிப்பையும் நீக்கி சத்துவ குணப் புசிப்பையேபுசிக்க வேண்டுமென்று ருள - வது செய்யுளிலும், அவையிரண்டினும் நசையகற்றி நிமல சத்துவமே வருத்தனையாக நின்று சத்துவ புசிப்பருந்தும் என்று ருகூ-வது செய்யுளிலும், குணசம்பந்த மிருக்கின்ற வரையிற் பிறப்பைக் கொடுக்கு மாதலால் நிற்குணமான அருளே தனுகரணபுவன போகமாக விளங்குஞ் சகசநிஷ்டா காலத்து அச்சத்துவ குணப் புசிப்பையும் நீக்கவேண்டுமென்று கூஉ - வது செய்யுளிலுங் கூறியிருக்கின்றமையால், அவாநிலைப் பொருளாக

வமைத்து உரையெழுதப் பட்டது. அன்னைதன் வயிற்றிற்பு சித்தவக் குணமாயாக்கையும் பொறியுமம்மனமும் மன்னி டும் என்னுங்கருத்தை அங்கீகரிக்கு மிடத்து, தாமதகுண த்மா இராசத குணத்மா சத்துவகுணத்மாவெனப் பாரம் பரியப்பட்டு வருமல்லது அக்குணங்கண்மாறித் திருவருளை யடைதற்கேது எங்ஙன முண்டாமெனின், அற்றன்று ஆன்மாக் களுக்கு இம்முக்குணங்களும் க்ஷணேக்ஷணே ஒருபடித்தன் றி மாறிமாறி ஒருகுணமிஞ்சி நிற்கின்ற வழக்கமாதலால், மாதாபி தாக்களுடைய குணப்படியே சிசுக்களுக்குத் தனுகரணபுவன போகமிருந்த போதினும், இராசதகுணமிஞ்சி நின்றகாலத்தும் சத்துவகுணமிஞ்சிநின்ற காலத்தும் ஆன்மாக்களுக்குக் காமிய மாகவும் நிட்காமியமாகவும் சிவபுண்ணியங்குன்றி அப்புண் ணிய முதிர்ச்சியால் பின்புமாதா பிதாக்களுக்குச் சத்துவகுண மிஞ்சிநிற்குங்காலத்துக் கருவில்சீவகலை பிரவேசித்து அக்கு ணமே தனுகரணபுவன போகமாக மிஞ்சிவரும். இப்படி சிலசென்மாந்தர நிட்காமிய சிவபுண்ணிய முதிர்ச்சியால் நிர் க்குணமான திருவருளையடைவார், ஆதலால் பாரம்பரிய மா றிப்போய்விடும். உ - ம். வாசிட்டம். தாமதத்துடனிராசதஞ் சாத்திகமென்னு நாமமுக்குணப் பிறவியு முயற்சியானண் ணும் சேமமுத்தியைத்தருவது சாத்திகச் செய்கை, ராமவு த்தமராகவ வென்று மீட்டுரைப்பான். சஎ

உலகினில்விடையவிச்சையையுடையோ
னுணவதற்கேற்கவேகூட்டி
இலகிடப்புசித்தான் முயற்சிமேன்மேலு
மேறியேவளர்ந்திடுமதுபோல்
குலவிடும்வீட்டிலிச்சையையுடையோன்
கொண்டதற்கேற்கவேயுணவை
இலகிடப்புசித்தான் முயற்சிமேன்மேலு
மேறியேவளர்ந்திடுமன்றே.

இ - ள். உலகினில் - இவ்வுலகத்தின்கண்,—விடையயிச்சையையுடையோன் - விடையசுகத்தில் மிகவும் பிரியமுள்ளவன்,—உணவு - சௌக்கிய போசனம் அவுஷதம் சிற்றுண்டி முதலியவற்றை,—அதற்கேற்கவே கூட்டி - அவ்விச்சைக்குத் தக்கப் புசிப்புக்களையே சேர்த்து, — இலகிடப் புசித்தால் - திருத்தியாய்ப் புசிப்பானாகில், — முயற்சிமேன் மேலுமேறியே வளர்ந்திடும் - அவ்விஷயானுபவத்தில் மேலுமேலும்அதிகரித்து விருத்தியடையும்,—அதுபோல - அதைப்போல,—குலவிடும்வீட்டில் - விளங்காநின்ற மோட்சவீட்டினிடத்து,—இச்சையையுடையோன் - மிகவுமபேட்சை யுள்ளபக்குவர்களும் கொண்டதற்கேற்க,தான்கொண்ட அபேட்சைக்குத்தக்க உணவை - சத்துவகுணப்புசிப்பை முயற்சித்துத்தேடி,— இலலகிடப்பு சித்தால் - புசிப்பானாகில்,—முயற்சி - வீட்டின் முயற்சியானது,—மேன்மேலுமேறியே வளர்ந்திடும் - மேலுமேலும்அதிகரித்து விருத்தியடையும் என்க. அன்று - ஏ - அசை.

தமகுணப்புசிப்பேமயக்கத்தையளிக்குந்
தகுமிராசதகுணப்புசிப்பே
மமதையையளிக்குஞ்சத்துவப்புசிப்பே
மயக்கமுமமதையுமகற்றி
அமலநல்லுணர்வேயளித்திடுமதனு
லவையிரண்டினுநசையகற்றி
நிமலசத்துவமேவருத்தனையாக
நின்றுசத்துவப்புசிப்பருந்தும்.

இ - ள். தமகுணப்புசிப்பே - தாமதகுணப் புசிப்பானது,— மயக்கத்தையளிக்கும்-மயக்கத்தையேகொடுக்கும்,—தகுமிராசதகுணப் புசிப்பே - தகுதியுள்ள இராசதகுணப் புசிப்பானது,—மமதையையளிக்கும் - மமகாரத்தையேகொடுக்கும்,—சத்துவப்புசிப்பே - சத்துவகுணப்புசிப்பானது,—மயக்கமு மமதையுமகற்றி - மயக்கத்தையு மமகாரத்தையு

நீக்கி,—அமல நல்லுணர்வே யளித்திடும் - நல்ல திருமலஞான மாத்திரத்தையே கொடுக்கும்,—அதனால் - ஆதலால்,—அவை யிரண்டினு நசையகற்றி - முன் சொல்லிய தாமத இராசத மாகிய இருவித குணப்புசிப்பினிடத்தும்இச்சையை நீக்கி,—நிமல சத்துவமேவருத்தனையாக - நிருமலமான சத்துவகுணத்தையேவழக்கமாகக்கொண்டு நின்று,—நீக்கிய தாமத ராசத குணங்களும் அப்புசிப்புக்களும் வந்தடாது திடச்சித்தமாக நின்று சத்துவப் புசிப்பருந்தும் - சத்துவகுணப் புசிப்பையே புசித்து வரவேண்டும் என்க. சக

முக்குணப்புசிப்புக்களையுமீதீதென்றுபிரித்
துணர்த்துகின்றார்.

அடிசின் முன்னுரைக்குமறுசுவையவையை
யருந்திடுகாலையினோக்கி
கடினமுமுரைப்புமிராசதமவையிற்
கழிந்திடுபுராதனமூவன்
மடிவுறுதமமென்றிருமையுமகற்றி
மாலைகாலைப்பொழுதகற்றிக்
கடினவுச்சியிற்சத்துவகுணப்புசிப்பே
கைக்கொண்டுதினமருந்திடுமால்.

இ - ள். அடிசின்முன்னுரைக்கும்-சொல்லப்பட்ட அன்ன முதலான,— அறுசுவையவையை - அறுசுவை பதார்த்தங்களை,— அருந்திடுங்காலையில் - புசிக்குங்காலத்து,— நோக்கி - யூகித்துப்பார்த்து,— கடினமும் - வன்மையும்,— உரைப்பும் - காரமுள்ளவைகள்,— இராசதம் - இராசதகுணப் புசிப்பென்றும்,—அவையிற்கழிந்திடும் - அவ்வன்ன முதலிய பதார்த்தங்களி லெஞ்சிநின்ற,—புராதனம் - பழையதும்,—மூவல் - ஊசலுமாயுள்ளவைகள்,—மடிவுறுதமமென்று - சோம்பலைத்தருந் தாமதகுணப் புசிப்பென்று,—இருமையுமகற்றி - தாமத இராசத குணம்சமான இருவிதப் புசிப்பைநீக்கி, — சத்துவகுணப்

புசிப்பு - சத்துவகுணப் புசிப்பையும்,—மாலை காலைப்பொழு தகற்றி - மாலைவேளையினுங் காலைவேளையினு நீக்கி - கடினவுச் சியினில் - உதராக்கினி மிகுந்தெழுகின்ற வுச்சிக்காலத்தில்,— கைக்கொண்டு தினம் மருந்திடும் - தினந்தோறும் கைப்பற் றிப் புசித்துவரவேண்டும். ஆல் - அசை. சத்துவப் புசிப்பாக இருந்தபோதினுங் காலைப்பொழுது மாலைப்பொழுதிற் புசிக் கில் அவைகள் தாமதப் புசிப்பைப்போல மயக்கத்தையே கொடுக்கும் ஆதலால் மாலைப்பொழுதகற்றி என்றார். ருO

இடம்பொருளேவன்மூன்றையுமுடையோர்க்
கித்தகையுணவுறுமந்த
இடம்பொருளேவன்மூன்றையுமகன்றோர்க்
கித்தகையுணவுறாததனால்
திடம்பெறவூரிலுச்சியினேகித்
திருவருட்புசிப்பித்தலென்றே
விடம்பெறினுங்கைப்பெற்றதையருந்தின்
விமலமாய்நின்றிடுஞ்சித்தம்.

இ - ள். இடம் பொரு ளேவல் - இடம்பொருளேவ லான,—மூன்றையுமுடையோர்க்கு-மூன்றியல்பு மொத்திருக் கின்றவர்களுக்கே,—இத்தகை யுணவுறும் - இவ்வித சத்துவ குணப் புசிப்பு கிடைக்குமல்லது,— இடம் பொரு ளேவல் - இடம்பொருளேவலான,—மூன்றையு மகன்றோர்க்கு - மூவித வியல்பையும் பற்றவிட்டுத் துறந்த அதிதிகளுக்கு,—இத்தகை யுணவுறாது - இவ்வித சத்துவகுணப் புசிப்பு கிடைப்பது துல் லபம்,—அதனால் - ஆதலால்,—திடம்பெற - திடசித்தனாய்,— ஊரிலுச்சியினேகி - ஊருக்குள்ளே உச்சிக்காலத்திற் பிரவே சித்து,— திருவருட் புசிப்பித்தலென்று - திருவருள் ஊட்டி வைக்கின்ற புசிப்பென்று,—விடம் பெறினும் - விஷப்புசிப்பு வந்து நேரிடினும்,—அதைக் கைப்பெற்று - அதைக்கைக்கொ

ண்டு,—அருந்தில் - புசிக்கில்,—விமலமாய் நின்றிடுஞ்சித்தம் - மனமானது மயக்கமும் மகாரமுநீங்கி நிருமல ஞானத்துக் கேதுவான சுத்தாவத்தையைப்பெற்றுவிளங்கியிருக்குமென்க.

வி - ம். விடம் பெறினும் என்ற பதத்துக்குமுன் னீக் கச்சொன்ன தாமத இராசத குணம் புசிப்பு வந்துகிடைக்கி னும் என்றுமாம். இச்செய்யுள் அதிதிகளுக்குச் சொன்ன பொதுவிதி. இவரது சிறப்புவிதியை கூச - வது செய்யுளிற் காண்க. ருஉ - வது செய்யுண் முதல் இவ்வேழு செய்யுட்க ளானுஞ் சுத்தாவத்தை வந்தடைதற்கு உபாயங்கூறி இனி இங்ஙனஞ் சொல்லிவந்த கிரியாமார்க்கர், உபாசனுமார்க்கர், சுத்தமார்க்கர் ஆகிய மூவரும் அடைகின்ற நிஷ்டா இலக் கணங் கூறுவானெடுத்துக்கொண்டருளியது. ருக

தந்திரகிரியைநெறிதனிலீசன்
றந்திடப்புசிக்கும்பின்மறைசொல்
அந்தநல்லுபாசனுநெறியதனி
லனைத்துநாமெனக்கண்டுபுசிக்கும்
இந்தவவ்வுணவின்மாறுபாடின்றி
யிருமையுமுடிந்ததேயாயின்
தொந்தமில்சிவமேசடுமுகமாகித்
தொக்கிருந்தருந்தன்மேனிவொம்.

இ - ள். தந்திரகிரியை நெறிதனில் - ஆகமப்பிரதி பாதக மான கிரியாமார்க்கத்தில்,— ஈசன்றந்திடப்புசிக்கும் - எல் லாஞ் சிவனே ஊட்டுகின்றதாகக் கண்டு புசிப்பன்,—பின் - பின்பு,—மறைசொல்லந்த நல்லுபாசனு நெறியதனில்-வேதப் பிரதி பாதகமான உபாசனுமார்க்கத்தில்,— அனைத்து நாமெ னக்கண்டு புசிக்கும் - எல்லா நமது பிரமானந்தமே யென்று கண்டுபுசிப்பன், — இந்தவவ்வுணவின் - இவ்விருவிதமார்க்கப்

புசிப்பினும், — மாறுபாடின்றி-வஞ்சகமின்றி, — இருமையுமுடிந்ததேயாயின் - அந்தந்த மார்க்கானுபவ வொழுங்கின்படியே புசித்து முடிந்தால், — தொந்தமில் சிவமே - சகல பந்தங்களு நீங்கிய சிவந்தானே, — சடுமுகமாகி - சுரோத்ராதி இந்திரியமைந்து மனதொன்று ஆகி ஆறுமுகத்தினிடத்தும், — தொக்கிருந்து - பொருந்தியிருந்து, — அருந்தன்மேனிவாம்-புசிக்க வேண்டுமென்கிற இச்சையை யடையும் என்க.

வி - ம். தாயினது முலைப்பாலை அபேட்சித் திருக்கின்ற சிசுவடைந்த வியாதிக்கு அத்தாயே ஔஷதபத்தியாதி புசிப்பைப் புசித்து அவ்வியாதியை நீக்குவது போல, சிவானந்த போகத்தை அபேட்சித்துள்ள பக்குவான் மாக்கள் அடைந்திருக்கின்ற சனன வியாதிக்குச்சிவமே - இந்திரியம் - ரு - மனது - க - ஆக ஆறு - இடங்களினும் ஆசாராதிசடுலிங்கங்களாக நின்று இவனுக்குள்ள விடையபோகங்களைத்தான் நைவேத்திய மாகக்கொண்டு இவனுக்குப் பிரசாத போகமாகக் கொடுத்துச் சனன வியாதியை நீக்குவர் ஆதலால், தொக்கிருந்தருந்தன்மேனிவாம் என்றார். ஆசாராதி சடுலிங்க மென்பதற்கு உதாரணம் - ஆசாரலிங்கமாய் நாசிதனிலே யிருந்தால் மணமே கொள்ளுவீர், அரியகுருலிங்கமாய் நாவுதனிலே யிருந்து முது சுவையே கொள்ளுவீர், தேசார்ந்த சிவலிங்கமாய் விழியிலே நின்று திருவுருக்கண்டு மகிழ்வீர், செய்ய சங்கமலிங்கமதினின்று திகழ்பரிசமே கொள்ளுவீர், மாசேது மில்லாத பிரசாதலிங்கமாய் வந்து செவியோசை கொள்வீர், மனமதனிலே மகாலிங்க மதுவாய் நின்று மகிழ் விடையமே கொள்ளுவீர், தூசோக மார்க்கமுறு பத்தர்மேற்றயவாய்ச் சடுஸ்தலமுலிங்கமான, தற்பரானந்த சிவமே இஷ்டலிங்கமே சச்சிதானந்த சிவமே. என்பது காண்க. ருஉ

இருவகைநெறியும்வரவுபோக்குடைத்தா
யிலங்கிடுமிதுவன்றிமாயை
ஒருமுதலென்றும்மித்தையதென்று
முரைத்திடுநிட்டையும்விகற்ப
நிருவிகற்பமுமாய்நிகழ்ந்திடுஞ்சகச
நிட்டையெக்காலையுமின்றென்
றொருவிமற்றவையைச்சகசநிட்டையரை
யுலகெங்குந்தேடியேயிடுமால்.

இ - ள். இருவகை நெறியும் - முற்கூறிய கிரியா மார்க்கம் உபாசனு மார்க்கமாகிய இரண்டும்,—வரவு போக்குடைத்தாயிலங்கிடும்—இறத்தல் பிறத்தலை யுடையதாய் விளங்கும்,—இதுவன்றி - இதுவல்லாமலும்,—மாயையொரு முதலென்றும் - மாயையென்பது தனித்தொரு முதலென்றும்,—மித்தையதென்றும் - அம்மாயை யென்பது பொய்யென்றும்,—உரைத்திடும் - சொல்லப்பட்ட,—நிட்டையும் - இவர்கள் நிட்டையானது,—விகற்ப நிருவிகற்பமு மாய் நிகழ்ந்திடும் - மாயையுண்டென்றதனுல் விகற்ப நிட்டையு மாகவிளங்கும்,—சகச நிட்டை - சகச நிட்டையானது,—எக்காலையு மிலையென்று - இவர்களுக்கு எக்காலத்துங் கிடையாதென்று,—ஒருவிமற்றவையை - அவ்விரு விதமார்கத்தையும் விட்டு நீக்கி,—சகச நிட்டையரை - சுத்தமார்க்கப்படி சகச நிட்டையையுடைய சற்குருவை,—உலகெங்குந் தேடியே யிடுமால். இவர்கள் அவ்வித ஆசிரியன் எங்குளனென்று உலகமெங்குந் தேடி அடையவேண்டும் என்க. ருரு

முன்புறுநிட்டைசவிகற்பமாகி
முத்தியின்மூன்றுநின்றிலகும்
பின்புறுநிட்டைதிருவிசற்பமதாய்ப்
பிரமமற்றொன்றுநின்றிலகும்

வன்புறன்னிட்டையிருமையுமுறினும்
வரவுபோக்குடையதாய்நிகழும்
இன்புறின்னிட்டைசகசமதாகி
யிலங்கிநின்றிடுநின்றபடியே.

இ-ள். முன்புறு நிட்டை - முதலனுட்டித் தடையத் தக்க கிரியா மார்க்க நிட்டை,—சவிகற்பமாகி - வேறுவேறாய்,—முத்தியில் - முத்தித் திசையில் மூன்று நின்றில்கும் - பதிபசுபாச மென்னுமுப் பொருள்ாக விளங்கும்,—பின்புறு நிட்டை - பின் அனுட்டித் தடையத் தக்க உபாசனா மார்க்க நிட்டையானது,—நிருவிகற்ப மதாய் - யாதொரு விகற்பங்களு மின்றி,—பிரமமற்றொன்று நின்றிலகும் - பிரமமொன்று மாத்திரமாக விளங்கும் - வன்புறன் னிட்டை யிருமையு முறினும் - வலியுள்ள அவ்விருவித நிட்டைகளை அடைந்த போதினும்,—வரவுபோக் குடையதாய் நிகழும் - பிறத்தலிறத்தலுடைய தாகவே விளங்கும்,—இன்புறின் நிட்டை - இனிமையுள்ள விச்சுத்த மார்க்கத்தில் அடையத்தக்க சகச நிட்டையை,—சகச மதாகி - பற்றுதல் விடுதலின்றி எக்காலுஞ் சகசமாக,—இலங்கி நின்றிடு நின்றபடியே யிருந்து விளங்குவாயாக என்க.

வி - ம். "ஏகன் அனேகன் இருள் கருமமாயை யிரண்டாக விவையாறுதியில்", என்று பிரதிபாதிக்கின்ற கிரியாமார்க்கசவிகற்ப நிட்டை யுடையோர்க்கு மாயையுண்டென்றதனால் நினைப்புண்டு அதனால் வினையுண்டு அதனால் பிறப் பிறப்புண்டு. உபாசனா மார்க்க நிருவிகற்ப நிட்டை யுடையோர்க்கு மாயை பொய்யென்றதனால் முன்பே பந்தமுத்தி விவகாரம் இன்றாக வேண்டும். அன்றியும் சிருட்டி இன்றி சூனியமாக யிருக்க வேண்டும். அங்ஙனமின்றி சிருட்டிதிதி சங்காரம் உண்டாயிருத்தலானு பிரமத்துக் கீரறிவில்லாமையால் பிரமந்தன்னைப் பிரமமென்று அறிய மாட்டாது. சந்திரனிடத்துக் களங்கம்

போலப் பிரமத்தினிடத் துள்ள மாயையினுலே அலைதாடியி னுல் இதுமரையன்று பசு என்றுகண்டாற்போல, பிரமமென் பதொன்றுண்டென்று நிச்சயிக்கப் பட்டது. அம்மாயை சட மாதால் பிரமத்தைப் பிரமமென்றறிய மாட்டாது. இருளை இருளென்றும் ஒளியை ஒளியென்றும் அறிதற்கு இவை இர ண்டு மல்லாத ஓர்கண் வேண்டுவது போல, அவை இரண்டை யும் அறிதற்கு ஓர் ஆன்மா வேண்டும். அவையுண்டாகவே பந் தமுத்தி விவகாரமுண்டு அவையுண்டாகவே பிறத்த லிறத் தலு முண்டு ஆதலால் வன்புறன் நிட்டை இருமையு முறினும் வரவு போக்குடையதாய் நிகழும் - என்றார் என்க. ருசு

சவிகற்பநிருவிகற்பநிட்டையதுஞ்
சத்துவகுணத்தில்வந்ததுவாம்
இவிகற்பநீங்கிவருடமாயிரமங்
கிருந்திடினும்பினும்விழிக்கும்
செவிதினிலடையுஞ்சகசநிட்டையதே
திருவருடன்னில்வந்ததுவாம்
தவிருதல்கூடலின்றியேயங்குத்
தங்கிநின்றிடுநின்றபடியே.

இ - ள். சவிகற்பநிருவிகற்பநிட்டையதும் - கிரியாமார் க்க சவிகற்பநிட்டையும், — உபாசனுமார்க்க நிருவிகற்பநிட் டையும் ஆகிய இரண்டும், — சத்துவகுணத்தில் - சத்துவகுண விசேடத்தால், — வந்ததுவாம் - வந்துகிடைத்ததாம் — வருட மாயிரமங்கிருந்திடினும் - ஆயிரவருடம் அந்நிட்டையை விட்டு நீங்காதிருந்தபோதினும், — பினும் - பின்னும், — நீங்கி - அந் நிட்டைவிட்டு நீங்கி, — இவிகற்பம் - வேறு வேருன இப்பிர பஞ்சத்திற்ருன், — விழிக்கும் - சுட்டும், — செவிதினிலடையும் - கிரமமாயடையத்தக்க, — சகசநிட்டையதே - எப்போதும்பற் றுதல்விடுதலின்றிய சகசநிட்டையே, — திருவருடன்னில் வந் ததுவாம் - திருவருள்விசேடத்தால் வந்துகிடைத்ததாகும், —

அங்கு - அந்நிட்டையில், — தவிருதல்கூடலின்றியே - அடைந்தோம் விட்டோமென்றில்லாமல்,—தங்கி நின்றிடு நின்றபடியே - இருந்தபடியே இருப்பாயாக,—என்க.

வி - ம். உ - ம். வாசிட்டம் "ஆயிரவருடஞ்சென்று மங்கமேயிருக்கினுள்ளே, மேயதாமவ்வவத்தைமெல்லென வொருபானின்று,தேயலதாகித் தோன்றுந்திகழுமவ்வவத்தையாலே, தூயநற்சீவன் முத்தருணர்ச்சியைத்தொடர்வரன்றே. ருரு

சகசநன்னிட்டையியல்புதம்முயற்சி
சற்றொன்றுமின்றியேயருளால்
சகமதும்போகமதுவுந்தம்முடலுந்
தருகரணமுமெவையவையாய்
அகமதிலுதித்ததுமறையாம
லகன்றதுபின்னுதியாமல்
அகமுரைகாயவருத்தமேயின்றி
யமர்ந்துநின்றிடுநின்றபடியே.

இ - ள். அருளால் - திருவருளாலடையத்தக்க,— சகசநன்னிட்டையியல்பு - சகசநிட்டையினது சுபாவமானது,—தம்முயற்சி - தனதுபோதமுயற்சி,—சற்றொன்றுமின்றி - யாதொன்றுமின்றியிருத்தல்,—சகமதும் போகமதுவுந்தம் முடலுந்தருகரணமும் - தனுகரணபுவனபோகமாகிய நான்கும்,— எவை - எந்தவருளால் சகசநிட்டையடைந்ததேயோ,—அவையாய் - அந்த அருள்வடிவாகவேயிருந்து,—அகமதிலுதித்த - உனதுள்ளத்திற்றோன்றிய,—அதுமறையாமல் - அச்சகசநிட்டைவிங்டு நீங்காமல்,—அகன்றது பின்னுதியாமல் - நீங்கிய சவிகற்பநிருவிகற்பநிட்டைகள் இனிவந்தடையாமல்,—அகமுரைகாயவருத்தமேயின்றி - மனோவாக்குக்காயங்கள் வந்துறுமல்,—அமர்ந்து - சகசநிட்டையையடைந்து,— நின்றிடுநின்றபடியே - இருந்த திருந்தபடியே இருப்பாயாக என்க. ருசு

அருளண்டமாகிலுயிர் பிண்டமாகு
மண்டமுந்தோற்றன் மாத்திரமாய்
அருணின்றதாகிற்பிண்ட முமதுபோ
லாகியேநின்றிடுமண்டம்
அருள்வடிவாகிற்பிண்டமுமுயிரா
யருளிற்றாதான்மியமடையும்
அருளந்தச்சிவத்துக்கங்கமதாகி
யமர்ந்துநின்றிடுநின்றபடியே.

இ - ள். அருள் - அருளானது விலாசார்த்தமாக விசிறி ம்பித்தகாலத்து,—அண்டம் - அண்டாகாரமாம்,—ஆகில் - அவ்வருளண்டாகாரமாக விளங்குமாயின்,—உயிர் - உயிரான வை,—பிண்டமாகும் - பிண்டமான தேகாகாரமாகவிளங் கும்,—அருள் - அருளுக்கண்டமும் உயிருக்குப்பிண்டமும்,— தோற்றன்மாத்திரமாய் - தோற்றமாத்திரமாக,—அருள் - அருளானது.—நின்றதாயின் - சிவமாய்நிற்குமாயின்,—அது போல - அருளைப்போலவே,—ஆகியே நின்றிடும் - உயிரும் அருளாகவேவிளங்கியிருக்கும்,—அண்டம் - அண்டமானது,— அருள்வடிவாகில் - அருளாகாரமாய் அவ்வருள் சிவத்திற்றாதா ன்மியமடைந்துவிளங்குமாயில்,—பிண்டமும் - பிண்டமும்,— உயிராய் - உயிராகாரமாயவ்வருளிற்றாதான்மியமடைந்துவிள ங்கும்,—அருள் - தாதான்மியமடைந்தவருளானது,—அந்தச் சிவத்துக்கங்கமதாகி - அச்சிவத்துக்கங்கமாகி நின்றபோது,— அமர்ந்து - உயிரருளுக்கங்கமாகி,—நின்றிடும் - இருக்கும்,— நின்றபடியே - பழைமையைப்போலிருந்தபடியே யிருக்கும் என்க.

வி - ம். சிவாங்கமாகநின்ற அருளே விலாசார்த்தமாக செகசீவபரமாக விரிந்து மீண்டுஞ் சிவாங்கமாகவே விளங்கிநி ற்குமென்பது கருத்து.

இருளினிலிருந்தும்பருவம்வந்ததற்பின்
னியற்றிடுமுயற்சியொன்றின்றி
மருளினிலடைந்துமருள்வடிவாகி
வயங்கிடுஞ்சகசமேபோல
மருளினிலிருந்தும்பருவம்வந்ததற்பின்
வருந்திடுமுயற்சியொன்றின்றி
அருளினிலடைந்திங்கருள்வடிவாகி
யமர்ந்துநின்றிடுநின்றபடியே.

இ - ள். இருளினிலிருந்தும் - ஆன்மா இருளவத்தையிற் கட்டுண்டிருந்தும்,—பருவம்வந்ததற்பின் - பரிபாகம் வந்து நேரிட்டபின்பு,—இயற்றிடுமுயற்சியொன்றின்றி-செய்யத்தக்கதனது பிரயத்தனம் யாதொன்றுமில்லாமலே,—மருளினிலடைந்து - மருளவத்தையையடைந்து மருள்வடிவாகி - மாயாவடிவமாகவே,—வயங்கிடுஞ்சகசமேபோல - சகசமாகவிளங்கியிருந்ததுபோல,—மருளினிலிருந்தும் - மருளவத்தையிலிருந்தும்,—பருவம்வந்ததற்பின் - பரிபாகம் வந்து நேரிட்டபின்பு,—வருந்திடுமுயற்சி யொன்றின்றி - வருத்தமுற்றுச்செய்யத்தக்கபிரயத்தனம் யாதொன்றுமில்லாமலே, — அருளினிலடைந்து - அருளவத்தையையடைந்து, — இங்கு - இவ்வுலகத்திற் றேகசஞ்சாரபரியந்தம், — அருள்வடிவாகி - அருள்வடிவாக அமர்ந்துநின்றிடு நின்றபடியே - இருந்தஇருந்தபடியே இருப்பாயாக என்க.

வி - ம். மைக்குழம்பிற் றனது பிரகாசக் கௌரவங்கெட்டுக் கிடந்த முத்துப்போல ஆணவத்திற் றனது அறிவின் கௌரவங் கெட்டுக் கிடந்த ஆன்மாவிற்கு அதை நீக்கிக்கொள்ளு முயற்சி எங்ஙனம் உண்டாம், ஆதலால் இயற்றிடு முயற்சி யொன்றின்றி இருளினி லிருந்து என்றார். அருளினது முயற்சியால் ஆன்மாவை ஆணவத்தி னின்றும் எடுத்து மாயையி

னிடமாகத் தனுகரண புவனபோகங் களைக் கொடுத் தமை யால் பருவம்வந்த தற்பின் முயற்சியொன்றின்றி இருளினி லிருந்தும் என்ற எதிர்மறை உம்மையால், அருளினது முயற்சி என்று வருவிக்கப் பட்டது. பருவம் வந்ததற்பின் முயற்சி யொன்றின்றி இருளினி லிருந்தும் என்ற எதிர்மறை உம்மை யால் அருளினது முயற்சி என்று வருவிக்கப் பட்டது. பருவம் வந்ததற்பின் மருளினிலடைந் தென்றமையால் இன்னும் பரு வமின்றி சிருட்டிக்கு வாராது எண்ணிறந்த ஆன்மாக்கள் ஆணவத்திற் கட்டுண்டு கிடக்குதென் பதாயிற்று. அவை எங் ஙனமெனின், இதுவரையில் நடந்த சிருட்டிக்கு அளவின்மை யானும், இப்போதுஞ் சிருட்டிக்கு வந்துகொண் டிருக்கின் றமையானும், பஞ்சகிருத்தியத்திற்கு ஓர்காலும் ஒழிவின்மை காணுமையானும் என்க. அருளினது முயற்சியால் ஆணவத்தி னின்றும் எடுத்து தனுகரண புவனபோகங்களைக் கொடுத்த தாமாயின் அவ்வான் மாக்களெல்லாம் உடனே ஏககாலத்தில் மோட்ச மடைய வேண்டும், அங்ஙனமின்றி முன்னும் பின்னு மாகச்சிலர் மோட்ச மடைந்தும் சிலர் இன்னும் சிருட்டிக்குவா ராநின்றனர்கள். ஆதலால் அருளது முயற்சி யென்பது கூடா மையெனின் அற்றன்று. ஒருசத்திரத்தி லிறங்கியிருந்த பாட் டைசாரிகள் பலருக்குஞ் சூரியோதயம் ஏககாலமாயிருந்தும் அவர்கள்தாங்கள்கருதிய ஊரை ஏககாலத்தில் அடையவில்லை அதுபோல, ஆன்மாக்களும் பக்குவபேதத்தால் முன்னும் பின் னுமாகவே முத்தியை அடையா நின்றனர்கள். ஆன்மாவை ஆணவத்தினின்றும் எடுப்ப அருளுக்கு முயற்சி யுண்டாக வேண்டிய தேதுகாரண மெனின், குற்றத்துக்குட்பட்ட ஒரு வனைக்கட்டி அடித்த நூறடியில் முதலடியா லுண்டான துன் பப் பெருக்கம் மற்றைய அடிகளுக்குத் தோற்ருது. துக்காதீ தப்பட்டுத் தம்பாகாரமாய் ஒன்றுந் தோற்ருது மருட்கே வலப்பட்டு நின்ருற்போல, ஆன்மா ஆணவதுன்பத்திற்றன

தறிவைப் பறிகொடுத்து, துக்காதீதமாய் ஒன்றுந் தோற்றாது இருட்கேவலப் பட்டு நின்றமையால், அவ்வாணவ துன்பந் தனக்குத் தோற்றாது முற்கூறிய குற்றவாளிபடும் ஒவ்வொரு அடியினது துன்பப்பெருக்கமும் அக்குற்றத்துக்கு விலக்ஷண மாக வேடிக்கைப்பார்த்து நின்றவர்களுக்குத் தோற்றுவது போல, நின்மலமான திருவருளுக்கு அவ்வான்மாக்கள் படுந் துன்பந்தெரிந்து காருணியத்தால் அதை நீக்க முயற்சித்த தென்க. அன்றியும் அவ்வான்மா தன்னமிசமானதால் என்க. கூபத்தில் விழுந்த குழந்தையை யெடுக்கத் தாயுங்கூடக்குதிப் பதுபோல அவ்வருள் இருளாகவும் மருளாகவும் பிரணவமா கவுநின்று ஆன்மாவைப் பரிபாகப்படுத்தி அப்பருவமுதிர்ச்சி யால் ஆன்மா அவ்வருளிற் றுதான்மியமடைந்து அவ்வருள் பழையபடியே சிவத்துக்கங்கமாயிருந்தது. ஆதலால் அருளினி லடைந்திங் கருள்வடிவாகி யமர்ந்து நின்றிடு நின்றபடியே என்றார். ௫அ

மருள்வடிவதற்குமஃதைநானென்றே
மன்னுஞ்சீவனுக்குமாதரவாய்
மருள்வடிவமுதம்புசித்திடுமதுவே
வயங்கிடுமற்றதையொருவி
அருள்வடிவமுதமூறிடவருந்தி
யஃதுமச்சீவனுங்கரைந்தே
அருள்வடிவதுவுஞ்சிவாங்கிசனும்மா
யமர்ந்துநின்றிடுநின்றபடியே.

இ - ள். மருள்வடிவதற்கும் - மாயாகாரியமாகியதேகத் துக்கும்,—அஃதைநானென்றே மன்னுஞ்சீவனுக்கும் - அத்தே கமே நானென்றிருக்கும் சீவனுக்கும்,—ஆதரவாய் - உதவி யாக,—மருள்வடிவமுதம் புசித்திடும் - அச்சீவன் அம்மாயா தேகபோகத்தையே புசிக்கும்,—அதுவேவயங்கிடும் - அம்மா யையே அச்சீவனுக்குத்தனுகரணபுவன போகமாகவிளங்கிடு

ருக்கும்,—மற்றதையொருவி - அம்மாயா தேக போகத்தை நீக்கி,—அருள்வடிவு - அம்மாயா தேகத்தையே அருட்டேக மாகவும்,—அமுதம் - அம்மாயாபோகத்தையே அருட்போக மாகவும்,—ஊறிட - மேலுமேலும் விருத்தியாக,—அருந்தி - கண்டு புசித்து,—அஃதும் - அம்மாயா தேகமும்,—அச்சீவ னும் - அப்போகத்தைப் புசிக்கும் சீவனும்,—கரைந்து - அரு ளாகக்கரைந்து,—அருள்வடிவதுவுஞ் சிவாங்கிசனுமாய் - அரு ளும் அவ்வருளிற்றாதான்மியமடைந்தசீவனுமாக,—அமர்ந்து - சிவத்துக்கங்கமாகப்பொருந்தி,—நின்றிடுநின்றபடியே - இரு ந்தபடியே இருப்பாயாக என்க. ருக

சாக்கிரமதனினிற்குந்தத்துவத்திற்
சாற்றுங்கேவலத்தினிற்சிறிது
நீக்கிமற்றதற்குநிற்குந்தத்துவத்தை
நிறுத்துதல்போலநின்மலமாஞ்
சாக்கிரமதனினீக்குதலின்றித்
தத்துவமனைத்துஞ்சுத்தத்தில்
ஆக்கியேநிறுத்துந்திருவருளதனு
லடைந்துநின்றிடுநின்றபடியே.

இ - ள். சாக்கிரமதனில் - சகலாவத்தையான சாக்கிர சொப்பனங்களிலும்,—சாற்றுங்கேவலத்தினில் - சொல்லப்ப ட்டகேவலாவத்தையான சுழுத்தியிலும், — நிற்குந்தத்துவத் தில் - இருக்கின்ற தத்துவங்களுக்குள்,—மற்றதற்கு - அச்சா க்கிர சொப்பனசுழுத்திகளுக்கு,—சிறிது நீக்கி - சில தத்துவ ங்களைநீக்கியும்,—மற்றதற்கு நிற்குந்தத்துவத்தை - அச்சாக்கி ரசொப்பனங்களுக்கு நிறுத்தவேண்டியசில தத்துவங்களை,— நிறுத்துதல்போல - நிறுத்துவதுபோல,—சுத்தத்தில் - சுத்தா வத்தையிலுண்டான,—நின்மலமாஞ் சாக்கிரமதனில்-நின்மல சாக்கிரமான அருளில்,—நீக்குதலின்றி - நீக்குவது நிறுத்து வதின்றி, — தத்துவமனைத்தும் - மாயாகரணங்களனைத்தை

யும்,—ஆக்கி - அருட்கரணமாக்கி,—நிறுத்தும் - மீட்டுமாயா கரணமாகாது நிறுத்தும்வல்லமையை,—திருவருளதனலடைந்து - திருவருட்கிருபையாற் பெற்று,—நின்றிடு நின்றபடியே - பழையபடியே சிவாங்கமாகயிருப்பாயாக என்க.

வி - ம். சாக்கிரமுஞ் சுழுத்தியுங்கூறினமையால் சொப்பனம் வருவிக்கப்பட்டது. கேவலாவத்தையும் சுத்தாவத்தையுங்கூறினமையால் சகலாவத்தைவருவிக்கப்பட்டது, தத்துவத்தை நீக்கி நிறுத்துதலென்பதற்குதாரணம் - சிவப்பிரகாசம், எண்ணவொண்றிலாத தீதமெய்தியதுரியத்தொன்று, நண்ணிடுஞ் சுழுத்தி தன்னினயந்துளதொன்று பின்னு - மண்ணிடுங்கனவுதன்னிலாறேழாஞ் சாக்கிரத்தின், கண்ணுறுமஞ்சாறுய கருவிகள்காணுந்தானே. என்பதுகாண்க. தத்துவங்களை அருட்கரணமாக்கி யென்பதற்குதாரணம் - சிவநெறிப்பிரகாசம். அகர உகர மகரம் விந்துநாதமாமூல மனுவினையைஞ்சத்திகடாம்வடிவாய்ப், பகருமனமங்காரம் புத்திசித்தம்பாவிக்கு முளமிவற்றிற் பதிந்தளத்தே, புகவுளதாம் புற்போலத்தாமேயாகப்பொருந்தியே பூதவுருப்பொருள்களெல்லாம், நிகரில் சிவரூபமாய்கண்டு நிற்க நிறுத்துமிதையத்திலிது நின்மல சாக்கிரமே. என்பதுகாண்க. கூ௦

மருள்வடிவாகியிருந்திடுமிடமு
மருளதாய்ப்புசிப்பதுமருளாய்
அருளிதின்மறைந்துநிற்குமென்பதுவு
மன்றியேநின்றமுன்போல
அருள்வடிவாகியிருந்திடுமிடமு
மருளதாய்ப்புசிப்பதுமருளாய்
மருளிதின்மறைந்துநிற்குமென்பதுவு
மாற்றிநின்றிடுநின்றபடியே.

இ - ள். மருள்வடிவாகி - மருளவத்தையில் மாயையேதனக்குத்தனுகரணமாகவும்,—இருந்திடு மிடமுமருளதாய்- அவ்வடிவத்தோடிருக்கின்றபுவனமாகிய இடமு மாயாப் பிரவஞ்சமாகவும்,—புசிப்பதுமருளாய் - புசிக்கின்றபோகமு மாயாபோகமாகவும்,—அருள் - அருளானது,—இதில் - இம்மருளில்,—மறைந்து நிற்குமென்பதுவும் - மறைந்து நிற்குதென்னு மெண்ணத்தையுமொழித்து,—நின்றமுன்போல - முன்மருளவத்தையை அடைந்து நின்றதுபோல,—அருள்வடிவாகி - இப்போது அருளே தனுகரணமாவும்,—இருந்திடுமிடமுமருளதாய் - அவ்வருள்வடிவத்தோடு மிருக்கின்ற புவனமாகிய இடமும் அருளாய் - புசிக்கின்றபோகமும் அருட்போகமாய்,—மருளது அம்மருளானது.—இதில் - இப்போதிவ்வருளில், — மறைந்து நிற்குமென்பதுவும் - மறைந்து நிற்குதென்கின்றயெண்ணமதையுமொழித்து,—நின்றிடு நின்றபடியே - இருந்தபடியே யிருப்பாயாக என்க. சுக

சகசநிட்டையதுலபித்திடுங்காலை
தம்முயற்சியதொன்றுமின்றிச்
சகசமதாகித்தன்னுளமதனிற்
றுனின்றிங்கிடைவிடாதூறும்
சுகவருளமுதமதனையேயருந்தித்
தொல்வடிவதுமெள்ளக்கரைந்து
சுகவருள்வடிவாய்ச்சுட்டெலாமருளாய்த்
தோன்றநின்றிடுநின்றபடியே.

இ - ள். சகசநிட்டையது - சகசநிட்டையானது,—லபித்திடுங்காலை - நேரிட்ட காலத்தில்,—தம்முயற்சிய தொன்றுமின்றி - தமதுமுயற்சியாதொன்று மில்லாது,—சகசமதாகி - எப்போதுமாய்,—தன்னுளமதனில் - தனதுள்ளத்தின்கண்,—நின்றிங்கிடைவிடாது - இடைவிடாது நின்று,—ஊறும் - மேலுமேலும் பெருகுகின்ற,—சுகவரு ளமுதமத

ஊனயே - இன்பத்தைத்தராநின்ற அருளமுதத்தையே,—அருந்தி - புசித்து,—தொல் வடிவதும்,—பழைய மாயாதேகமும்—சுகவருள் வடிவாய்,—இன்பத்தைத் தராநின்ற வருட்டேகமாய் - மெள்ளக்கரைந்து,—மாயாதேகமென்றேறி இருந்த வாசனு தோஷங்கொஞ்சங் கொஞ்ச மாகக்கரைந்து - சுட்டெலாமருளாய்,—அவனவளது வென்னுஞ்சுட்டுப் பொருள்களெல்லாம்,—அருளாய்-அத்திருவருளே வடிவாய்த்தோன்றி,—விளங்கி நின்றிடு நின்றபடியே - இருந்த படியேயிருப்பாயாக என்க. கூஉ

அருளொளியிச்சையதுதனிலுதிக்கி
　　னசைவறநின்றிடுஞ்சித்தம்
அருளொளிஞானமதுதனிலுதிக்கி
　　லகிலமவ்வருளதாய்த்தோன்றும்
அருளொளிகிரியையதுதனிலுதிக்கி
　　னகத்தினின்றருளமுதூறும்
அருளொளியமுதமருந்தியவ்வடிவா
　　யமர்ந்துநின்றிடுநின்றபடியே.

இ - ள். அருளொளி - திருவருள்விளக்கமானது,—இச்சையது தனிலுதிக்கில் - ஆன்மாவின் இச்சாசத்தியிற் பதியும்போது,—அசைவறநின்றிடுஞ் சித்தம் - சித்தம்சலிப்பற்றிருக்கும்,—அருளொளி - திருவருள்விளக்கமானது,—ஞானமதுதனிலுதிக்கில் - ஆன்மாவினது ஞானசத்தியிற்பதியும் போது,—அகிலமவ்வருளதாய்த் தோன்றும் - பிரபஞ்சம் அவ்வருள்வடிவமாகத் தோற்றும்,—அருளொளி - திருவருள் விளக்கமானது,—கிரியையது தனிலுதிக்கில் - ஆன்மாவினது கிரியாசத்தியிற்பதியும் போது,—அகத்தினின்றருள முதூறும் - திருவருளமுதமானது உள்ளத்தினின்று விளைந்து கொண்டேயிருக்கும்,—அருளொளி யமுதமருந்தி - விளங்காநின்ற அருளமுத

த்தையேபுசித்து, — அவ்வடிவாய் - அவ்வருள்வடிவமாய், - அமர்ந்து,—அவைசிவத்துக்கங்க மாகப்பொருந்தி - நின்றிடு நின்றபடியே,—இருந்தபடியே இருப்பாயாக என்க. சுரு

வி - ம். ஆன்மாவினது இச்சாஞானக் கிரியையாகிய மூன்றில் இச்சை அந்தக் கரணங்களினிடத்தும், ஞானம் ஞானேந்திரியத்தி னிடத்தும், கிரியை கன்மேந்திரியத்தி னிடத்தும் பிரவேசித்து விடயங்களை அனுபவிக்கின்ற வழக்கமாதலால், அவ்விச்சையில் திருவருள் பதியும்போது அவ்விச்சையில் அந்தக்கரணத்தி லொன்றான மனத்திற் பிரவேசிக்கும். மனதுக்கு விடையத்திற் பற்றுதலொழியும் ஒழியவே, புத்திக்குப் பகுப்பொழியும் - ஒழியவே, அகங்காரத்துக்கு அபிமான மொழியும் - ஒழியவே, சித்தஞ் சலிப்பற்று விளங்கும். ஆதலால் அருளொளி யிச்சையது தனிலுதிக்கி லசைவற நின்றிடுஞ் சித்தம் என்றார் - ஞானசத்தியிற் றிருவருள் பதியும் போது அந்த ஞானம் ஞானேந்திரியத்திற் பிரவேசிக்க அவ்விந்திரியம் திருவருளையன்றித் திரிசியத்தை யறியாது ஆதலால், அருளொளி ஞானமது தனிலுதிக்கி லகில மவ்வருளதாய்த் தோன்றும் என்றார், கிரியாசத்தியிற் றிருவருள் பதியும்போது அக்கிரியை கன்மேந்திரியத்திற் பிரவேசிக்க அவ்விந்திரியத்துக்கு அருட்டொழிலே யுண்டாம் - அத்தொழிலாலுண்டாகுஞ் சுகம் அருட்சுகமாகவே விளங்கும் ஆதலால், அருளொளிக் கிரியையது தனிலுதிக்கி லகத்தினின்றருளமுதூறும் என்றார். சுசு

இருளுறுமவத்தையடைந்தெங்குமிருளா
யிருந்துபின்விழித்திடல்போலும்
அருளுறுமவத்தையடைந்தெங்குமருளா
யமர்ந்துபின்விழித்திடுமென்னில்

இருளுறுமவத்தைதமசினலடைந்தே
யிராசதத்தாற்பினும்விழிக்கும்
அருளுறுமவத்தைசத்துவத்தடைந்தே
யந்தராசதத்திற்பின்விழிக்கும்.

இ - ள். இருளுறு மவத்தை யடைந்து - இருளவத்தை யை யடைந்து,—எங்கு மிருளாய் - எவ்விடத்து இருண்மய மாய்,—இருந்து - தானுமவ்விருள் வடிவாக விருந்து,—பின் - பின்பு சிருட்டியில்,—விழித்திடல் போலும் - மருளவத்தை யாகிய மாயையில் விழித்தது போல,—அருளுருமவத்தைய டைந்து - அருளவத்தையை யடைந்து,—எங்கு மருளாய் - எவ்விடத்தும் அருண்மயமாய்,—அமர்ந்து - தானுமவ்வருள் வடிவாயிருந்து,—பின்விழித்திடும் - பின்பு மாயையில் விழி க்கலாம்,—என்னில் - எப்படி என்னில்,—இருளுறு மவத் தை - இருளவத்தையை,— தமசினலடைந்து - தாமதகுணசே டத்தாலடைந்து,—இராசதத்தால் - தாமதகுண இராசதத்தி னலே,—பினும் விழிக்கும் - பின்னும் மாயையில் விழிக்கும் அதுபோல,—அருளுறு மவத்தை - அருளவத்தையை,—சத்து வத் தடைந்தே - சத்துவகுண விசேடத்தா லடைந்து,—அந்த ராசதத்தில்,—அச்சத்துவ குண இராசதத்தினல்,—பின்விழி க்கும் - பின் மருளவத்தையான மாயையில் விழிக்கும் என்க.

வி - ம். அருளையடைந்த ஆன்மா பின் மருளில் விழிக் கில் அம்மருள் அவ்வான்மாவை மறைத்து மயக்காதோ வென் னில் - அக்கினியானது சுபாவ மனுஷனைப் பாதிக்குமேயன்றி த்தெய்வ மருளடைந்தோனை உபாதிக்காதுபோல, அருளை யடைந்த ஆன்மாவை மறைத்து மயக்க மாட்டாது ஆதலால் - சத்துவத் தடைந்தே யந்தராசதத்திற் பின்விழிக்கும் என்றார். ஈண்டுவிழித்தலென்பது சுட்டியறிதல் சுட்டற்றுப் பொதுவா யறிதலெனப்பொருள். வாசிட்டம். "வித்தினுட பூவுங்காயு

மேவல்போலிதையந்தன்னில், சித்தின் காரணமதான சத்துவ சேடஙிற்கு, முத்தனும் மனமிறந்தான் மொய்யுடல்போகா போகத், தொத்தவின் பத்துன்பங்கள் சார்தலற் றொருமை யாகும்''

சுரு

மாயையிலடைந்தபின்பிருளவத்தை
வந்தடையாதுபின்படைதல்
மாயையின்றமசாலாதலாற்போக்கும்
வரவுமாய்நிகழ்ந்திடுமதனல்
ஆயவவ்வருளேயடைந்தபின்மாயை
யடைவதேயிலேபினுமடைந்தால்
ஆயவவ்வருளேயடைந்ததேயின்று
மடைந்ததுமாயைசத்துவத்தால்.

இ - ள். மாயையில்லடைந்த பின்பு - சிருட்டியான மருளவத்தையை அடைந்த பின்பு,—இருளவத்தை - சிருட்டிக்கு முன் ஏதுந்தெரியாது கிடந்த இருளவத்தை யானது,— வந்தடையாது - வந்தடைய மாட்டாது,—பின்படைதல் - சிருட்டியான பின்பு சுழுத்தி மூர்ச்சை முதலிய ஏதுந்தெரியாத மூடாவத்தை வருகின்றதே யென்னில்,—மாயையின் றமசால் - அவை தாமதகுண மாயாகாரியத்தால் அடைந்தது,— ஆதலால் - ஆனபடியால்,—போக்கும் வரவுமாய நிகழ்ந்திடும் - சனன் மரணந்தோற்றிக் கொண்டே யிருக்கும்,—அதன்மேலாய - அதற்கு மேலான,—அவ்வருளே யடைந்தபின் - அவ்வருளவத்தையை யடைந்த பின், — மாயையடைவதேயிலே - மருளவத்தையான மாயை வந்தடையவேமாட்டாது,— பினும் - அருளவத்தையை யடைந்த பின்னும் அடைந்தால்,— மருளவத்தை வந்தடையு மாகில் - ஆயவவ்வருளே யடைந்ததே யின்றும்,— அவ்வருளவத்தையை யடைந்த தில்லையாம் - அடைந்தது,—அடைந்தார்க ளென்று சொல்வது - மாயை சத்துவத்தால்,—சத்துவகுண மாயா காரியமான சாந்

தவிருத்தியை - அடைந்ததே யல்லது நேரே,—அருளவத்தை யையடைந்ததல்ல என்க.

வி - ம். அறுவைக் கழுக்கு நீங்காத வரையில் அவைதுறைக்குப்போ யறை யுண்டு வருவதொழியாது போல, ஆன்மாவிற்குத் தாமத குணம்சமான மூடவிருத்தி நீங்காத வரையில் சனன மரணத்தில் மொத்துண்டது விடாது. ஆதலால் மாயையின் றமசாதலாற் போக்கும் வரவுமாய் நிகழ்த்திடு மென்றார் - சூரியவொளியிற் கலந்த கண்ணுக்குத் திரிசியந் தோற்றாது அவ்வொளியே மிக்குத் தோற்றுவது போல, அருளிற் கலந்த ஆன்மாவிற்கு அருளே தோற்றுமல்லது பிரபஞ்சந் தோற்றாது ஆதலால், ஆயவவ் வருளையடைந்த பின் மாயை யடைவதே யில்லை என்றார். சில முத்தர்கள் மாயாப் பிரபஞ்ச விவகாரத்தோடு கூடி யிருக்கின்றாரே யெனில், அவர்கள் சத்துவ குணம்ஸமான ஞானவிருத்தியால் அருணிட்டையை அப்பியாசிக் கின்றவர்களே அல்லது, பரமுத்தியான சகச நிட்டை கூடி அருளிற் கலந்தவரல்ல ஆதலால் அடைந்தது மாயைசத்துவத்தா லென்றார்.

சுகூ

இருளினிலடைந்துதானுமவ்விருளா
யிருந்தங்குநின்றதாயிடினும்
அருளினிலடைந்துதானுமவ்வருளா
யமர்ந்தங்குநின்றதாயிடினும்
மருளினிலடைந்தவடிவம்இல்லாது
வடிவதிங்கிருத்தலேதென்னில்
இருளருளவத்தைதனிற்குணபோத
மிலங்கியங்கிருத்தலினன்றே.

இ - ள். இருளினி லடைந்து - இருளவத்தையை யடைந்து,—தானும் - ஆன்மாவும்,—அவ்விருளா யிருந்தும் - அவ்விருள் வடிவமா யிருந்து,—அங்கு நின்ற தாயிடினும் - அவ்விருளவத்தையி லிருந்தாலும்,—அருளினி லடைந்து - அருளவத்

தையை யடைந்து,—தானும் - ஆன்மாவும்,—அவ்வருளா யமர்ந்து - அவ்வருள் வடிவமாக யிருந்து,—அங்கு நின்ற தாயினும் - அவ்வரு ளவத்தையி லிருந்தாலும்,—மருளினி லடைந்த - மருளவத்தையிற் பெற்ற,—வடிவம் - சரீரமானது,—நில்லாது - அவ்விரண்டிடத் திலும் நிற்க மாட்டாது,—வடிவ மிங்கிருத்தலே தென்னில் - இவ்விடத்து சுழுத்தி மூர்ச்சை முதலிய மூடாவத்தை யினும் பரமுத்தி திசையான அருளவத்தையினுந் தேக மிருக்கின்றதே எனின்,—இருள் - மூடாவத்தையினும்,—அருளவத்தை தனில் - பரமுத்தி திசையான அருளவத்தை யினும்,—குணம் - மூடாவத்தையில் இருளினது அம்சமான அவித்தியா குணமும்,—போதம் - பரமுத்தி திசையில் அருளினது அம்சமானசத்துவ குணமாயா விருத்திஞானமும்,—இலங்கியுந் திருத்த லினன்றே - அவ்விரு வித அவத்தையி னிடத்தும் விளங்கி யிருக்கின்றமையால் தேக மிருக்கலாம் என்க.

வி - ம். அவித்தையா குணமும் சத்துவ மாயா விருத்தி ஞானமும் இருத்தல் அவ்விரு வித அவத்தைக்குங் குற்ற மன்றோ வெனின், அருளவத்தை யான பரமுத்தி திசையில் சகச நிட்டையின் பொருட்டுச் சரீரம் இருக்கவேண்டுவ தாதலால், அதற்குச்சுத்த சத்துவ மாயா விருத்தி ஞானமானது அநுகூல மன்றிப்பிரதி கூலமன்று. சுழுத்தி மூர்ச்சை முதலிய மூடா வத்தையில் அவித்தையா குணம் இல்லா விடில் கன்மத்தில் ஆர்ப்புண்ட ஆன்மா துன்பஞ்சகியான். சுமை தாங்கியில் ஒருபுருடன் சுமையை இறக்கி இளைப்பாறுதல் போல, சுழுத்தி மூர்ச்சை முதலிய மூடாவத்தையில் ஆன்மாதேகச் சுமையையும் கருவி களில் அலைப் புண்டு நடத்திய விவகாரச் சுமையையும் ஒழிந்து சுகித்திருந்து சகச நிஷ்டாகால வரையில் சரீரத்தைச்சுமந்து திரியவேண்டுவதாதலால் அவையு மிருத்த லாற்குற்ற மன்று. சுஎ

சத்துவகுணமேவருத்தனையாகித்
தங்கியேயுளத்தினுணின்றால்
ஒத்துறுநிட்டைகூடுமிலதே
லொருவியிச்சகலகேவலத்தைத்
தொத்துறுமன்றிக்குணமுமாயையினிற்
றோன்றினதாதலாலிந்த
ஒத்துறுநிட்டையுண்மையேயன்று
முபாசகநிட்டையென்றுணரே.

இ - ள். சத்துவகுணமே - சாத்வீத குணமே,—வருத்தனையாகி - வழக்கமாய்,—தங்கியே யுளத்தினு ணின்றால் - மனதிற் பொருந்தியிருக்குமாயின்,—ஒத்துறும் - சாதகத்துக் கொற்றுமையாக,—நிட்டை கூடும் - உண்மை நிட்டையைக்கூடும்,—இலதேல் - இவ்வழக்கமில்லாவிடில்,—ஒருவி - அந்நிட்டையை விட்டு,—சகலகேவலத்தை - சகலாவத்தை கேவலாவத்தைகளை,—தொத்தும் - அடையும்,—அன்றி - அல்லாமலும்,—குணமும் - அச்சத்துவ குணமும்,—மாயையினிற்றோன்றின தாதலால் - பிரகிருதி மாயையினிடத்துத் தோற்றியதான படியால்,—இந்த ஒத்துறு நிட்டை - சாதகத்துக் கொற்றுமையான இந்நிட்டையானது,—உண்மையே யன்றும் - உண்மை நிட்டையல்லவாம்,—உபாசக நிட்டையென்று - அப்பியாசக நிட்டையென்று,—உணர்வாய் - அறிவாயாக.

வி - ம். சுத்தாவத்தைக் குச்சாதனமான சத்துவகுணம் ஞானவிருத்தி யாதலானும், சுகாதீகமான ஞானவிருத்தியைக் கொண்டே உண்மை நிட்டை கூடவேண்டிய தாதலாலும், சத்துவ குணமே வருத்தனையாகித் தங்கியே யுளத்தினுணின்றால் ஒத்துறு நிட்டைகூடும் என்றார். சத்துவகுணம்-சமானஞான விருத்திமேலிடாத காலத்துத் தாமதகுணமாகிய கேவலாவத்தையும் இராசதகுண காரிய சகலாவத்தையும் ஆன்மாவை யடையும் ஆதலால், ஒருவி இச்சகல கேவலத்

தைத் தொத்துறும் என்றார். சத்துவகுண ஞானவிருத்தியைக் கொண்டு அடையும் நிட்டையானது விருத்திகளிறந்த அருளால் அடையும் சகசநிட்டையல்ல ஆதலால், ஒத்துறு நிட்டையுண்மையே யன்று மூபாசகநிட்டையென்றார். ஆத்மானுசந்தான நிமித்தம் சமாதிசாதகத்தை அப்பியாசிக்கின்றவர் களுக்குச் சகலாவத்தையினும் கேவலாவத்தையினும் அந்நிட்டை கைகூடாது. சுத்தாவத்தையினின்றே சாதிக்கவேண்டும். அதேனென்னில் சகலாவத்தையான சாக்கிரசொப்பன அவத்தையில் தத்துவக்கூட்டா லிருப்பதினால் நிற்சிந்தைவரமாட்டாது. கேவலாவத்தையான மறைப்பிலுஞ் சுழுத்தியிலும் ஏதுந்தெரியாத அந்தகாரவிருள் அவ்விடத்து அருள்வியாபகவிளக்க மின்றதலானும், இவ்விருவிதவவத்தைகளு நீங்கிச்சுத்தா வத்தையான துரியாவத்தையினின்றே சமாதிநிட்டையை அப்பியாசிக்கவேண்டும். இத்துரியத்தை நனவிற்சாக்கிரமென்று சொல்லப்படும் துரியமிருப்பது சாக்கிரத்துள்ளே என்றார். திருமூலருக்கும் இவ்வித சமாதிநிட்டை அப்பியாசபலத்தால் சகசநிட்டையான அருள் நிட்டை கைகூடவேண்டு மென்பது கருத்து. கூஅ

ஆதலிற்சகலகேவலசுத்த
மடைந்திடலிங்குமாயையதாம்
வாதனையொழிந்துங்குணமிருத்தலினிவ்
வடிவகன்றிடிற்பினுஞ்சுத்த
சாதமுற்றிடுதலன்றியேநிட்டைத்
தானடைந்திடுதலேயின்றாம்
ஏதமிலருளிலுண்மைநிட்டையினை
யெய்தினோர்சீவன்முத்தர்களே.

இ - ள். ஆதலின் - ஆனபடியால்,—சகலகேவல சுத்தம் - சகலகேவலசுத்தாவத்தைகளால்,—அடைந்திடல்-அடைகின்ற நிட்டைகள்,—இங்குமாயையதாம் - இவ்விடத்து மா

யாநிட்டையேயாம்,—வாதனை யொழிந்தும் - சகலகேவலசுத்தகாரிய வாசனைகணீங்கினும்,—குணமிருத்தலின் - குணஞ்சத்தையுடைய காரணமாயைக ளிருக்கின்றபடியால்,—இவ்வடிவகன்றிடில் - இவர்க்குச்சரீரம் நீங்கில்,—பினும் - பின்பொருசரீரமெடுத்து,—சுத்தசாத முற்றிடுதலன்றி - அதிற்சுத்த சாதனமான உண்மைநிட்டையை யடைந்தாலல்லது,—வீட்டை - மோட்சவீட்டை, — தானடைந்திடுத லேயின்றும் - தாங்களடைகின்ற தில்லையாம்,—ஏதமில் - குற்றமற்ற,—அருளின்,—திருவருளால், — உண்மைநிட்டையினை - சகசநிட்டையை,—எய்தினோர் - அடைந்தவர்களே, — சீவன் முத்தர்கள் - சீவன் முத்தர்களென்று சொல்லப்படுவர்கள் என்க.

வி - ம். சகலகேவல சுத்தாவத்தையிற் றோன்றுங் கோரமூட ஞானவிருத்தியாலடையு நிட்டைமாயாநிட்டை யாதலாலடைந்திடலிங்கு மாயையதாம் என்றார். இம்மூவித விருத்திகளாலடையும் நிட்டைக்கு மனனசமாதி நிட்டையென்றும், மௌட்டிகசமாதி நிட்டையென்றும், சொரூபசமாதி நிட்டையென்றும் பெயர். காரியமான இவ்விருத்திகளுள்ள வரையில் காரணமானமாயை கெடாது. அம்மாயையுள்ளவரையில் சனனமரணம் விடாது. ஆதலால் இவர்கள் இனியொருசனனமெடுத்துவிருத்திகளிறந்த அருள்நிட்டையானசகசநிட்டையை அடைந்தேமோட்சம் அடையவேண்டும் ஆதலால், குணமிருத்தலின் இவ்வடி வகன்றிடிற்பினும் சுத்தசாதமுற்றிடுத லன்றியே வீட்டைத்தான டைந்திடுதலே இன்றும் என்றார். சுக

**சீவன், சீவன் முத்தன், பரமுத்தன் இவர்கள்**
**இலக்கணம் கூறுவானெடுத்துக் கொண்டருளியது.**

சீவனிம்மாயைதனின்முத்தனருளிற்
சீவன்முத்தன்னடுவோவின்
மேவலிற்சீவன்றனக்கந்தவருளும்
மெய்முத்தன்றனக்குமாயையுமில்

சீவன்முத்தனுக்கேரியின்கரைமீதிற்
றிகழ்ந்திடுவோனைப்போற்றோன்றும்
ஆவதுநாகங்கண்கரிதுதிக்கை
யறிதல்போற்காகங்கண்மணிபோல்.

இ - ள். சீவன் - சீவனானவன்,—இம்மாயையதனில் - இம்மாயையிலும்,—முத்தன் - பரமுத்தனானவன்,—அருளில்- திருவருளிலும்,—சீவன் முத்தன் - சீவன்முத்தனானவன்,—நடுவோவில் - அவ்விரண்டின் மத்தியமானபிரணவத்திலும்,—மேவலில் - பொருந்தியிருக்கின்ற வர்களாதலால்,—சீவன்றனக்கு - பந்தத்திசையிலுள்ள சீவனுக்கு,—அந்தவருளும் - முத்தித்திசையான அத்திருவருளும்,—மெய்முத்தன்றனக்கு - பரமுத்தனுக்கு,—மாயையும் - பந்தத்திசை யானமாயையும்,—இல் - தோற்று தலில்லையாம்,—சீவன் முத்தனுக்கு - மத்திய திசையிலுள்ள சீவன் முத்தனுக்கு,—ஏரியின்கரை மீதிற்றிகழ்ந்திடு வோனைப்போல் - ஏரிக்கரை மேலுற்றோனுக்கு,—தோன்றும் - இருபுறத்து முள்ளபயிரும் சலமுந்தோற்று வதுபோலவும்,—ஆவது நாகம் - சர்ப்பமானது,—கண் - கட்கருவியொன்றால் ரூபத்தையும் சத்தத்தைம் அறிவது போலவும்,—கரி - யானையானது,—துதிக்கை - தும்பிக்கை யான ஒருகருவியால் கந்தத் தையும் பரிசத்தையும்,—அறிதல் போல் - அறிதல் போலவும்,—காகங்கண்—காக்கையினது இரண்டு கண்களிலும்,—மணிபோல் - ஒருமணி திரிந்து அறிதல் போலவும் பந்தத்திசையையும் முத்தித்திசை யையும் அறிந்திருப்பன் என்க.

அந்தரவடிவசீவன்முத்தர்களிவ்
வடிசிலைப்புசித்ததேயின்றும்
இந்தவிவ்வுலகிலிவைபுசித்திடவென்
றிந்நெறியோர்களின்றிறைஞ்சித்

தந்திடலுணவுமளவின்றிப்புசிக்குஞ்
சமித்ததுமலமதுமாகா
மந்திரமதனைவடிவதாய்க்கொண்ட
மகிமையிலென்றுணர்ந்திடுவாய்.

இ - ள். அந்தரவடிவம் - ஆகாயம் போலும் உருவாருவ வதேகத்தையுடைய,—சீவன்முத்தித்திசையையுடையவர்கள்,—இவ்வடிசிலே - இவ்வன்னமுதலிய உணவுகளை,—புசித்ததேயின்றும் - புசித்ததே கிடையாது,—இந்த விவ்வுலகில் - இப்பிரபஞ்சத்தில்,—இது புசித்திட வென்று - இவ்வுணவைப்புசிக்க வேண்டு மென்று,—இந்நெறியோர்கள் - இப் பந்தான்மாக்கள்,—நின்றிறைஞ்சி - வணங்கி நின்று,—தந்திடல் - உபசரித்துக் கொடுப்பார்களாயின்,—உணவும் - அப்புசிப்பும்,— அளவின்றிப்புசிக்கும்-மிதமின்றிப் புசிப்பன்,—சமித்தது - ஜீரணமானது,—மலமதுமாகா - மலமாகவுங் கழியமாட்டாது,—மந்திரமதனை - பிரணவமந்திரத்தையே,—வடிவமாய்க் கொண்ட - மந்திரதனு வாகக்கொண்ட,—மகிமையி லென்றுணர்ந்திடுவாய் - தெய்வீகத்தினு லென்றறிவாயாக என்க. எக

அந்தரவடிவ சீவன் முத்தர்களென்பதற் குதாரணம் பிரபுலிங்கலீலை.

அணுமயங்குமின்னுழை கதிரெறிந்தவாளாக
விணைமயங்குமெய்ப்படாது வாள்வறிதுபோயிற்று
பணைமயங்குதோள் மாயைதன்படாமுலைபடாத
மணமயங்குதண்சோதிமேல் வாள்படவற்றே.

எங்கெங்குநோக்கின் மருண்மயமாகி
யிருந்திடும்பந்தமாந்திசையில்
தங்குந்தன்வடிவமருண்மயமாகித்
தயங்கியேநின்றதுகுறிபோல்

எங்கெங்குநோக்கிலருண் மயமாகி
யிருந்திடுமுத்தியாந்திசையில்
தங்குந்தன்வடிவமருண் மயமாகித்
தயங்கியேநிற்குதல்குறியே.

இ-ள். எங்கெங்கு நோக்கில் - எவ்வெவ் விடங்களிலெப் பொருளைப் பார்க்கினு,—மருண் மயமாகி யிருந்திடும் - மாயா காரிய பதார்த்தங்களாகவே விளங்கி யிருக்கும்,—பந்தமாந் திசையில் - சீவனு யிருந்துள்ள பந்தத் திசையில்,—தங்குந் தன்வடிவம் - பொருந்திய தனது சரீரமும்,—மருண் மய மாகி - மாயா வடிவமாய்த் தயங்கியே நின்றது குறிபோல் - விளங்கி யிருந்த தன்மையைப் போல,—எங்கெங்கு நோக்கில் - எவ்வெவ் விடங்களி லெப்பொருளைப் பார்க்கினும்,— அருண் மயமாகி யிருந்திடும் - அருள்வடிவ மாகவே விளங்கி யிருக்கும்,—முத்தியாந் திசையில் - பரமுத்தனு யிருந்துள்ள முத்தித் திசையில்,—தங்குந் தன்வடிவம் - பொருந்திய தனது சரீரமும்,—நிற்குதல் குறியே - விளங்கி யிருத்தலே அடையாளமாம் என்க. எஉ

அருள்வடிவதுவேபார்வையிற்றெருக்கி
லகப்படாதென்றுநின்றிலகும்
மருள்வடிவதுவேபார்வையிற்றெருக்கில்
வந்தகப்பட்டுநின்றிலகும்
அருண்மருணுவோமோவடிவதுவே
யகப்படும்பார்வையொன்றுக்கே
மருள்வடிவுலகுமோவடிவோர்க்கு
வாய்த்திடும்பார்வையொன்றுக்கே.

இ-ள். அருள் வடிவதுவே - அருள் வடிவமே,—பார்வையிற் றெருக்கில் - எக்காலுந் திருஷ்டியி லழுந்தி யிருக்குமாயின்,—அகப் படாதென்று நின்றிலகும் - சரீரம் எக்காலும்

பரிசத்துக் ககப்படாது விளங்கும்,—மருள் வடிவதுவே - மாயா வடிவமே,—பார்வையிற் றெக்கில் - எக்காலுந் திருஷ்டியி லழுந்தி யிருக்குமாயின்,—வந்தகப் பட்டு நின்றிலகும்,—சரீரம் எக்காலும் பரிசதெரிசனத்துக் ககப்பட்டு விளங்கும்,—அருண் மருணடுவாம் - அருளுக்கும் மாயைக்கும் மத்தியமாகிய,—ஓவடிவதுவே - பிரணவ மந்திர தனுவானது,—அகப்படும் பார்வை யொன்றுக்கே - தெரிசன மொன்று மாத்திரத்துக்கே அகப்படும்,—மருள்வடி வுலகும் - மாயா வடிவமான பிரபஞ்சமும்,—ஓவடிவோர்க்கு - பிரணவ மந்திர தநுவை யுடைய சீவன் முத்தர்களுக்கு,—வாய்த்திடும் பார்வை யொன்றுக்கு - தோற்ற மொன்று மாத்திர மாகவே விளங்கியிருக்கும் என்க. எங

பழுதையிற்கிளிஞ்சிற்கட்டையினின்றும்
பாம்பும்வெள்ளியுங்கள்வனும்போல்
எழுதருமாரோபிதமதிட்டான
மிலங்கிடிலாததுபோலும்
முழுதுணர்சிவம்வந்துதித்தவிச்சீவன்
முத்தருக்குலகமின்றுதித்தல்
கழுதிரதம்போற்காட்சிமாத்திரமாய்க்
கவும்விவகாரமேயின்றும்.

இ - ள். பழுதையிற் கிளிஞ்சிற் கட்டையி னின்றும் - ரச்சுசுத்தி தறியினின்றும்,—பாம்பும் வெள்ளியுங் கள்வனும் - சர்ப்பமும் இரசிதமும் கள்வனு மாகிய,—எழுதரு மாரோபிதம் - உண்டாகிய ஆரோபிதங்கள்,—அதிட்டான மிலங்கிடில் - ரச்சுசுத்தி தறியாகிய அதிட்டானங்கள் விசாரித்து விளங்கிய காலத்து,—இலாதது போலும் - அவ்வாரோபிதங்கள் பொய்யாய்ப் போனது போல,—முழுதுணர் சிவம் வந்துதித்த - சர்வாதிஷ்டான மான பூரணஞான சிவத்தை யடைந்த,—இச்சீவன் முத்தருக்கு - சீவன் முத்தர்களுக்கு,—உல

கமின்று - ஆரோபிதமான பிரபஞ்சந் தோன்றுது,—உதித்தல் - அவர்களுக்குப் பிரபஞ்சந் தோற்றுவ தெப்படியென்னில்,—கழுதிரதம்போல் - கானற் சலம்போல,—காட்சிமாத்திர மாய்க்கவும், தோற்று மாத்திரமாய் விளங்கி யிருக்கும்,—விவகாரமே யின்றும் - விவகாரத்துக்கு வருவதில்லையாம் என்க. எச

இவைக்கோர் திருஷ்டாந்த முணர்த்துகின்றர்.

கனவதுபோல்விவகாரமுண்டென்னிற்
கனவதுநீங்கியேவிழித்தால்
கனவிதென்றுணருமாங்கவர்தமக்கக்
கனவுவந்துதவுதலுண்டோ
கனவுமுன்கண்டநினைவுமாத்திரமாய்க்
காணுறுமகத்ததுபோலக்
கனவிந்தவுலகுஞ்சீவன்முத்தருக்குக்
காணன்மாத்திரமதாய்நிகழும்.

இ - ள். கனவதுபோல் - சொப்பன விவகாரம்போல,—விவகார முண்டென்னில் - சீவன் முத்தருக்கு விவகார முண்டென்பையாகில்,—கனவது நீங்கியே விழித்தால் - கனவுநீங்கி நனவில் விழித்தால்,—கனவிதென்றுணரு மாங்கவர் தமக்கு - இங்ஙன நடந்த விவகார மித்தையாகிய சொப்பன விவகாரமென்றறிந்தவர் களுக்கு,—அக்கனவு வந்துதவுதலுண்டோ - அச்சொப்பனப் பொருளவர்களுக் குதவி யாகுமோ,—கனவு முன்கண்ட - சொப்பனப் பொருளானது,—நினைவு மாத்திர மாய்க்காணுறு மகத்து - உள்ளே நினைவு மாத்திரமாகவே தோற்றும்,—அதுபோல் - அப்படி போல,—கனவிந்த வுலகும் - சொப்பனம்போற் றோன்றியழியு மிப்பிரபஞ்சமும்,—சீவன் முத்தருக்கு - சீவன் முத்தர் களுக்கு,—காணன் மாத்திரமாய் நிகழும் - தோற்றல் மாத்திர மாகவே விளங்கும் என்க. எரு

சொற்பனமதனிற்கனவிதென்றிடுமோர்
சொப்பனசாக்கிரநடுவே
நிற்பனபோலுமருண்மருணடுவே
நின்றிடும்பிரணவவடிவம்
சிற்பரசீவன்முத்தனவ்வடிவாய்ச்
செகமிதுஞ்சிவமதுந்தோன்ற
நிற்பனதனக்குநிழலின்றிநிழல்போ
னிலத்தடியின்றியேநிகழும்.

இ - ள். சொற்பன மதனில் - சொற்பனத்திற்றானே,— கனவிதென்றிடுமோர் - இவை சொப்பனமென்றுணரும்,— சொற்பன சாக்கிர நடுவே - மத்தியிற் சொப்பன சாக்கிரமென்னு மோரவத்தை,—நிற்பனபோல - உண்டா யிருப்பது போல,—அருண் மருணடுவே - அருள் வடிவத்துக்கும் மருள் வடிவத்திற்கு மத்தியில்,—நின்றிடும் பிரணவ வடிவம் - பிரணவ சரீரமிருக்கும்,—சிற்பரசீவன் முத்தன் - மேலான ஞானத்தைப் பெற்றுள்ள சீவன் முத்தன்,—அவ்வடிவாய் - அப்பிரணவ சரீரத்தோடு கூடிநின்று,—செகமிதும் - இந்தப் பிரபஞ்சமும்,—சிவமதும் - அந்தச்சிவமும்,—தோன்ற நிற்பன - விளங்கக் கண்டிருப்பன்,—தனக்கு - தனது சரீரத்துக்கு,— நிழலின்றி - சாயலின்றி,—நிழல்போல் - சாயையைப் போல,—நிலத்து - பூமியில்,—அடியின்றியே நிகழும் - தனக்கெனவோர் காரணமின்றிச் சஞ்சரிப்பன். காற்சுவடின்றிச் சஞ்சரிப்பனென்றும் பொருள் கொள்ளப் படும் என்க. எ௬

வெந்துறுபடமும்வறுத்திடும்வித்தும்
விளங்கிடுங்கானிற்சலமும்
இந்திரதனுவுங்கனவிருந்தகன்ற
விடமதுமிக்குமுன்னிருந்த

கமின்று - ஆரோபிதமான பிரபஞ்சந் தோன்முது,—உதித்தல் - அவர்களுக்குப் பிரபஞ்சந் தோற்றுவ தெப்படியென்னில்,—கழுதிரதம்போல் - கானற் சலம்போல,—காட்சிமாத்திர மாய்க்கவும், தோற்று மாத்திரமாய் விளங்கி யிருக்கும்,—விவகாரமே யின்றும் - விவகாரத்துக்கு வருவதில்லையாம் என்க. எச

இவைக்கோர் திருஷ்டாந்த முணர்த்துகின்றார்.

கனவதுபோல்விவகாரமுண்டென்னிற்
கனவதுநீங்கியேவிழித்தால்
கனவிதென்றுணருமாங்கவர்தமக்கக்
கனவுவந்துதவுதலுண்டோ
கனவுமுன்கண்டநினைவுமாத்திரமாய்க்
காணுறுமகத்தது போலக்
கனவிந்தவுலகுஞ்சீவன்முத்தருக்குக்
காணன்மாத்திரமதாய்நிகழும்.

இ - ள். கனவதுபோல் - சொப்பன விவகாரம்போல,—விவகார முண்டென்னில் - சீவன் முத்தருக்கு விவகார முண்டென்பையாகில்,—கனவது நீங்கியே விழித்தால் - கனவுநீங்கி நனவில் விழித்தால்,—கனவிதென்றுணரு மாங்கவர் தமக்கு - இங்ஙன நடந்த விவகார மித்தையாகிய சொப்பன விவகாரமென்றறிந்தவர் களுக்கு,—அக்கனவு வந்துதவுதலுண்டோ - அச்சொப்பனப் பொருளவர்களுக் குதவி யாகுமோ,—கனவு முன்கண்ட - சொப்பனப் பொருளானது,—நினைவு மாத்திர மாய்க்காணுறு மகத்து - உள்ளே நினைவு மாத்திரமாகவே தோற்றும்,—அதுபோல் - அப்படி போல,—கனவிந்த வுலகும் - சொப்பனம்போற் றோன்றியழியு மிப்பிரபஞ்சமும்,—சீவன் முத்தருக்கு - சீவன் முத்தர் களுக்கு,—காணன் மாத்திரமாய் நிகழும் - தோற்றல் மாத்திர மாகவே விளங்கும் என்க. எரு

சொற்பனமதனிற்கனவிதென்றிடுமோர்
சொப்பனசாக்கிரநடுவே
நிற்பனபோலுமருண்மருணடுவே
நின்றிடும்பிரணவவடிவம்
சிற்பரசீவன்முத்தனவ்வடிவாய்ச்
செகமிதுஞ்சிவமதுந்தோன்ற
நிற்பனதனக்குநிழலின்றிநிழல்போ
னிலத்தடியின்றியேநிகழும்.

இ - ள். சொற்பன மதனில் - சொற்பனத்திற் றானே,— கனவிதென்றிடுமோர் - இவை சொப்பனமென்றுணரும்,— சொற்பன சாக்கிர நடுவே - மத்தியிற் சொப்பன சாக்கிர மென்னு மோரவத்தை,—நிற்பனபோல - உண்டா யிருப்பது போல,—அருண் மருணடுவே - அருள் வடிவத்துக்கும் மருள் வடிவத்திற்கு மத்தியில்,—நின்றிடும் பிரணவ வடிவம் - பிர ணவ சரீரமிருக்கும்,—சிற்பரசீவன் முத்தன் - மேலான ஞா னத்தைப் பெற்றுள்ள சீவன் முத்தன்,—அவ்வடிவாய் - அப் பிரணவ சரீரத்தோடு கூடிநின்று,—செகமிதும் - இந்தப் பிர பஞ்சமும்,—சிவமதும் - அந்தச்சிவமும்,—தோன்ற நிற்பன - விளங்கக் கண்டிருப்பன்,—தனக்கு - தனது சரீரத்துக்கு,— நிழலின்றி - சாயலின்றி,—நிழல்போல் - சாயையைப் போ ல,—நிலத்து - பூமியில்,—அடியின்றியே நிகழும் - தனக்கெ னவோர் காரணமின்றிச் சஞ்சரிப்பன். காற்சுவடின்றிச் சஞ் சரிப்பனென்றும் பொருள் கொள்ளப் படும் என்க. எக

வெந்துறுபடமும்வறுத்திடும்வித்தும்
விளங்கிடுங்கானலிற்சலமும்
இந்திரதனுவுங்கனவிருந்தகன்ற
விடமதுமிங்குமுன்னிருந்த

முந்துறுகடமுங்கடமதையெடுத்து
முடிந்தபின்றிகிரியிற்சுற்றும்
கந்துருநகரும்போன்முத்தர்வடிவுங்
காட்சிமாத்திரந்தாய்நிகழும்.

இ-ள். வெந்துறு படமும் - அக்கினிப் பிரவேசமான வஸ்திர மடியும்,— வறுத்திடும் வித்தும் - வறுத்த விதையும்,—விளங்கிடுங் கானலிற் சலமும் - பிரகாசியாநின்ற பேய்த்தேரும்,—இந்திர தனுவும் - வானவில்லும்,—கனலிருந் தகன்ற விடமும் - அக்கினியி லிருந்து நீங்கின இடமும்,—இங்கு முன்னிருந்த முந்துறு கடமும் - பெருங்காய மிருந்து நீங்கிய பாண்டமும்,—கடமதை யெடுத்து முடிந்தபின் - குலாலன் வேலை தீர்ந்து கடத்தை யெடுத்துக் கொண்ட பின்பு,—திகிரியிற் சுற்றும் - சக்கரத்தின் சுழற்சியும்,—கந்துரு நகரும் போல் - கந்தர்வ பட்டணத்தைப் போலவும்,—முத்தர் வடிவம் - சீவன் முத்தர்களுடைய சரீரம்,—காட்சி மாத்திரமதாய் நிகழும் - தோற்று மாத்திரமாய் விளங்கும் என்க.

வி-ம். தத்தபடங் குளிர்வெயிலுக் குபயோகப் படாது போல, இவர் சரீரம் அணைக்கப் பிடிக்க வுபயோகப் படாது. வறுத்த விதையுணவுக் குபயோக மாத்திரமே யன்றி விளைவுக்கிட மில்லாது போல, இவர்போகங்களைப் புசிப்பது போற்றோற்ற மாத்திர மன்றி இதாகிதமான ஆகாமியத்துக் கிடமில்லை - கானற்சலம் வெள்ளப் பெருக்குபோற் றோற்ற மாத்திரமன்றி நதிச் சுவடுறாதுபோல, இவர்தேகம் உலகத்திற் சஞ்சரித்தாலுங் காற்சுவடுறாது. இந்திரதனுசு மழைக்காதார மன்றியுத்தத்துக் காதார மாகாது போல, இவர் விவகாரம் பக்குவர்க்கன்றி அபக்குவர்க் குபயோகப் படாது. அக்கினி யிருந்த விடமும் பெருங்காய மிருந்த கடமும் அவை நீங்கினுஞ்சில நாள் உஷ்ணமும் வாசனையும் போகாது போல, மருளவத்தை

யான மாயை நீங்கினும் அதனது காரியமான சரீரம் சிலநாளுலகத்திற் சஞ்சரித் திருக்கும். கடகாரியத்துக்காகச்சுழற்றிய திரிகை கடகாரியந் தீர்ந்துஞ் சிலநேரம் வேகத்தாற் சுழலுதல்போல, தேகமெடுத்த பிரயோசன மான அருளையடைந்தும் பந்தான் மாக்கள் பொருட்டுப் பிரணவா வத்தையிற்சில காலஞ் சஞ்சரிக்கும், இந்திர ஜாலத்தாற் றோற்றிய புருடமிருகாதிகளுக்கு நிழற்சாய லில்லாது போல, இவர்தேகத்திற்கு நிழற்சாய லிராது. எஎ

மண்ணினிற்றடுக்கச்சலத்தினினனைக்க
வருங்கனலிற்சுடவளியால்
நண்ணினின்றசைக்கவெளியிடம்விடவே
நணுகிடாதென்றுநின்றிலகும்
புண்ணியசீவன்முத்தர்தம்வடிவம்
பொற்புறவ்வடிவுகண்டளவே
விண்ணின்மண்ணினிற்பாதலத்தினினுள்ளோர்
வியப்பொடுமெழுந்திறைஞ்சிடுவோர்.

இ - ள். மண்ணினிற்றடுக்க - பூமியிற் புதைக்கவும்,—சலத்தினினனைக்க - சலத்திலமிழ்த்தவும்,—வருங்கனலிற்சுட - அக்கினியாற்சுடவும்,—வளியானண்ணினின்றசைக்க - காற்றலசைக்கவும்,—வெளியிடம் விடவே - ஆகாயமிடங் கொடுக்கவும்,—நணுகிடாது - அகப்படாது,—என்றுநின்றிலகும் - எப்போதுமிருந்துவிளங்கும்,—புண்ணியஜீவன் முத்தர்தம் வடிவம் - புண்ணியசொரூபரான சீவன்முத்தர்களுடைய சரீரமானது,—பொற்புறவ்வடிவு - அழகுபொருந்திய வத்திருமேனியை,—கண்டளவே - கண்டமாத்திரத்திலே,—விண்ணில் - தேவவுலகத்திலும்,—மண்ணினில் - பூவுலகத்திலும் பாதலத்தினில் - பாதாளவுலகத்திலும்,—உள்ளோர் - இருக்கப்பட்டயாவரும்,—வியப்பொடும் - ஆச்சரியத்துடனே,—எழுந்திறைஞ்சிடுவோர் - எழுந்துவணங்கப்படுவார்கள். எஅ

மூன்றுநற்சுடரினின்னையொப்பவராய்
மூன்றுகாலமுமுணர்ந்தவராய்
மூன்றுலகத்துமுவமையில்லவராய்
மூன்றுலகமுமறிந்தவராய்
மூன்றுநற்காண்டமுந்தெரிந்தவராய்
மூன்றுசிற்பதமுமுற்றவராய்
மூன்றுமுன்மலமுமொருங்கறுப்பவராய்
மூன்றுதாபமுமகன்றவராய்.

இ - ள். மூன்று நற்சுடரில்-சோமசூரியாக்கினி யென்னு முப்பிரகாசத்துக்குள்,—இன்னையொப்பவராய் - சூரியனைப் போன்றவராயும்,— மூன்றுகாலமும் - பூதபௌஷ்ய வர்த்த மானகால விவகாரங்களையும்,—உணர்ந்தவராய் - அறிந்தவரா யும்,—மூன்றுலகத்தும் - சுவர்க்கமத்திய பாதாளமென்னுந்தி ரிவிதவுலகத்திலும்,—உவமையில்லவராய் - சமானமில்லாதவ ராயும்,—மூன்றுலக மறிந்தவராய் - திரிலோகத்தையு மறிந் தவராயும்,—மூன்றுகாண்டமும் - கிரியை, உபாசனை, சுத்த மாகிய மூவிதகாண்டங்களையும் தெரிந்தவராய் - அறிந்தவரா யும்,—மூன்றுசிற்பதமும் - சீவதுரியம் பரதுரியம் சிவதுரிய மாகிய மூவிதஞானபதத்தையும்,—உற்றவராய் - அடைந்தவ ராயும்,—மூன்று முன்மலமும் - அனுதியாயுள்ள வாணவாதி மும்மலங்களையும்,—ஒருங்கறுப்பவராய் - முற்றும் பற்றறுக்க வல்லவராயும்,—மூன்றுதாபமும் - ஆன்மீகதெய்வீகபௌதீக மாகிய முத்தாபங்களையும்,— அகன்றவராய் - நீங்கினவராயு மிருப்பர்கள் என்க.

வி - ம். சூரியன் முப்பிரகாசத்திலொன்றென்பதாக வழ ங்கினும் சந்திரன், அக்கினி, நட்சத்திரங்கள், நவக்கிரகங்கள் இராசிகள் முதலானவைகளுக்குப் பிரகாசத்தைக்கொடுத்துந் தற்பிரகாசத்திற் குறைவின்றியிருத்தல்போல, இச்சீவன் முத் தன்றன்னையடைந்த அடியார்களுக்கு அருட்கண்விளக்கிக்கொ

டுத்துத் தாங்களுமவ்வருட்கண் மாறுமலே யிருந்துசஞ்சரிப்பவர்களாதலானும், இன்னும் இவர்மருளவத்தை யருளவத்தையாகிய இரண்டினனுபவத்தை யுணர்ந்திருந்தும் அருளவத்தையினின்று மருளவத்தையினனுபவத்தையும், மருளவத்தையினின்று அருளவத்தையினனுபவத்தையும் ஆன்மாக்களுக்குணர்த்தக்கூடாமையின், சிலகாலம் லோகோபகாரமாகப்பிரணவாவத்தையினின்று தம்மைச்சரணடைந்தபக்குவர்களுக்கு அம்மூவிதவவத்தையினனுபவங்களையும் விளக்கிக்கொடுத்துந் தாம் அப்பிரணவாவத்தையின் மாறின்றிச் சஞ்சரிப் பவராதலால், இன்னையொப்பவராயென்றார், (உ-ம்) கூர்மபுராணம், ஆதவன் கதிரி லேழ்கதிர்சிறந்த வவற்றினிற் சுசிமுனத்தோடு, பேதமற்றெளிரு மியலரிகேச மிரண்டும்வாழ் புதற்கொளி வழங்கும், தீதறுவிசுவை விசுவெனுங் கதிரவான் றிகழொளி வெள்ளியை விளக்கும், மேதகுவசுரம் விளங்குகங்கியனன் மண்மகன் றனை விளக் குறுமால், ஓதியகிரக மெட்டையும் கதிரோ னொளிபெற விளக்குவ ரன்றே. என்பது காண்க.　　எ௬

### தீக்ஷாவிலக்கணம்.

அகவிருண்மாயைகருமமிம்மூன்று
　　மகற்றியேசுத்தங்கமாக்கித்
தகவிறுத்திடுதல்கையதாமப்பாற்
　　றன்னுயிராகியேநிகழும்
சுகசிவவுதையமாக்குதறீயாஞ்
　　சொற்றிடுதீக்கையினருத்தம்
செகமதிலவையிற்பாவனைகடந்து
　　செய்தங்குநிறுத்தவல்லவராய்.

இ - ள். அகவிருள்-ஆணவமலகாரியமாகிய காரணாங்கம்,— மாயை-மாயாமலகாரியமாகியதூலாங்கம்,— கருமம்-கருமமலகாரியமாகிய சூக்குமாங்கம்,—இம்மூன்றும் - அசுத்தமாகிய

விம்மூவித அங்கங்களையும்,—சுத்தங்கமாக்கி - பரிசுத்தமான இலிங்காங்கமாக்கி,—தகநிறுத்திடுதல் - மீட்டும் அசுத்தமாகா திருக்கச்செய்வதே,—கையதாம்-கையென்னும்பதத்தினருத்த மாம்,—அப்பால் - பின்பு,—தன்னுயிராகியே நிகழும் - தனக் குயிராகவிளங்கப்பட்ட,—சகசிவவுதையமா க்குதல் - சிவானந் தோதய முண்டாகச்செய்ததே,—தீயாம் - தீக்கை என்னும் பதத்தினருத்தமாம்,—செகமதில் - பிரபஞ்சத்திற்றேகசஞ்சா ரபரியந்தம்,—அவையிற்பாவனை கடந்து - அம்பிரபஞ்சபாவ னையொழிந்து நிற்கும்படி,—செய்து - இவ்வித தீக்கைகளைச் செய்து,—அங்கு - அவ்விலிங்காங்கசையோகமான ஆனந்தா னுபூதிநிலையில்,—நிறுத்தவல்லவராய் - விட்டுநீங்காதிருக்கச் செய்யும் வல்லமையையுடையவராய் என்க.

வி - ம். சீடனது அசுத்தாங்கமான மாயாமலகாரிய தூலாங்கத்திற் கிரியாதீக்கையினுலிஷ்ட லிங்கத்தையும், கரும மலகாரியமான சூக்குமாங்கத்தில் மந்திரதீக்கையினுற் பிரா ணலிங்கத்தையும், ஆணவமல காரியமான காரணங்கத்தில் வேத தீக்கையினுற் பாவலிங்கத்தையுந்தரித்து, சுகதுக்கரூ பமாகவரப்பட்ட பிராரத்தபோகங்களினது ரூபுருசிதிருத்திக ளைப்பிரித்து அம்மூவிதலிங்கங்களுக்கு மற்பிதஞ்செய்து அவ்வி லிங்கப்பிரசாதமாகப் புசிக்கச்செய்யு மேதுவினுற் பரிபாகம் வரச்செய்து, பின்புதத்துவமசிமகாவாக்கியானுக்கிரக முன்னி லையாற்றுவம் பதார்த்தமான சீவன் தற்பதார்த்தமான அருளி ற்றுதான்மியமடைந்து, அவ்வருள், அசிபதார்த்தமான சிவம் சுக்கங்கமாக விளங்கியிருக்கச்செய்தலால், அகவிருண்மாயை கருமமிம் மூன்றுமகற்றியே சுத்தங்கமாக்கி என்ருர். அருளா கிய அங்கமும் அதற்குயிராகவிளங்கும் லிங்கமாகியசிவமும் சையோகமாகும்படி செய்து இவ்வித அங்கலிங்க சையோகத் திற் சிவானந்தோதய முண்டாக்குதலால் தன்னுயிராகியே

ரிகமுஞ் சுகசிவவுதயமாக்குதறியாம் என்றார். சுத்தாங்கமென்ற மையால் அசுத்தாங்கமென்பது வருவிக்கப்பட்டது. அo

பிரணவவமுதேபுசித்தனுதினமும்
பிரணவமயமதேயாகி
மரணமதுறுமிம்மனிதரைப்போல
வடிவமாத்திரமதேதோன்றிப்
புரணநல்லொளிக்குமாயைக்குநடுவே
புகுந்திருந்திலங்குநற்குருவைச்
சரணெனவடைந்திங்கவனருளாலே
தரிக்கப்பெற்றங்கத்திலிங்கம்.

இ - ள். பிரணவவமுதே புசித்து - பிரணவாமிருதத்தையேபுசித்து,—அனுதினமும் - எப்போதும்,—பிரணவமயமதேயாகி - பிரணவாகாரமாய்,—மரணமதுறும் - இறந்துபோகாநின்ற,—இம்மனிதரைப்போல-இவ்வுலகத்திலுள்ளமனிதரைப்போல,—வடிவமாத்திரமதேதோன்றி - உருவத்தோற்றமாத்திரமாகவிளங்கி,—புரணநல்லொளிக்கும் - பூரணவிளக்கமாகிய அருள்வடிவத்திற்கும்,—மாயைக்கும் - மாயாவடிவத்திற்கும்,—நடுவே - மத்தியிலுள்ள,— புகுந்திருந்திலங்கும் - பிரணவவடிவமாகவிருந்து விளங்கப்பட்ட,—நற்குருவை - நல்லஞானசிரியனை,—சரணெனவடைந்து - அடைக்கலமென்றடைந்து,— இங்கு - இவ்விடத்து,—அவனருளாலே - அவ்வாசிரியனது கிருபையினாலே,—தரிக்கப்பெற்றங்கத்திலிங்கம் - ஆலாதிதனுத்திரயங்க லிஷ்டலிங்க முதலிய லிங்கங்களைத் தரிக்கப்பெற்றுக்கொண்டு என்க.

வி - ம், தரிக்கப்பெற்றங்கத்திலிங்கம், என்றபதத்திற்கு தற்சமயக்குறியென்றும் பொருள்கொள்ளப்படும். இன்னும் இவ்வாசிரியர் எச்சமையிகளுக்கும் ஆசிரியராகவிருப்பரென்

பதும், சமையாதீதமான இச்சுத்தமார்க்கானுபவப்படி உண்மை நிலையை யுணர்த்திவைக்குமதிகாரமும் வல்லமையுமுடையவ ரென்பதும் இவர் சமையாதீதரென்பதுந் தோன்ற நின்றது.

தேகமும்பொறியுங்கரணமுமுயிருந்
 திரிவுறுமாயையின்மயத்தை
ஏகநின்றகற்றித்தீக்கையிலாசா
 னிவைக்கதிட்டானமந்திரமே
ஆகநின்றமைத்தவகைகுருவருளா
 லறிந்ததிற்பாவனைதிடமாய்
ஊகமதுடனேமுன்னினைவகற்றி
 யுளத்தினிற்சகசமேபிறந்து.

இ-ள். தேகமும் - சரீரமும்,—பொறியும் - இந்திரியங்களும்,—கரணமும் - அந்தக்கரணங்களும்,—உயிரும் - பிராண வாயுவுமாகிய,—திரிவுறு மாயையின் மயத்தை - மாறுபடாநின்ற மாயாசொரூபமாகிய இக்காரியவுபாதிகளவையும்,—ஏகநின்றகற்றி-தனக்குவேறாக விசாரித்து நீக்கி,—தீக்கையில்-தீட்சாசமூகத்தில்,—ஆசான் - ஆசாரியன்,—இவைக்கு - இவ்வுபாதிகளுக்கு,—அதிஷ்டானமாக - சாட்சியாகவிளங்கும்,—மந்திரம் - மந்திரத்தை,—அமைத்தவகைநின்று - உபதேசித்த கிரமப்படி யிருந்து,—குருவருளால் - அவ்வாசிரியனது கிருபையால்,—அறிந்து - சுவானுபவமாக வுணர்ந்து,—அதில் - அச்சுவானுபவத்தில்,—பாவனைதிடமாய்- திடபாவனையாக,—ஊகமதுடனே - சுவானுபவயுக்தியோடு,—முன்னினைவகற்றி - முன்னுள்ள பிரபஞ்சபாவனைகளை யொழித்து,—உளத்தினில் - மனதில்,—சகசமேபிறந்து - சகசசமாதி யுண்டாகி, என்க.

வி - ம். மாயையின்மயத்தை என்றமையால், காரணவுபாதிக ளேழையுஞ்சேர்த்துப் பொருள் கொள்ளவேண்டும். இவையிரண்டு செய்யுட்களானும் வாதுளாகம விதிப்படி வேத

மந்திரக்கிரியா தீக்கைகளால் முன்னர் சிவாத்வைத சைவசமையாசார விதிப்படி சிவலிங்கதாரணந்தரித்துப் பின்பு சீடனது பரிபாகமே லீடுகண்டு தத்துவமசி மகர்வாக்கியானுபவத்தை யுணர்த்தவேண்டு மென்பது கருத்தாயிற்று. அ௨

இக்குலந்தனக்கிச்சமையமதென்று
மியம்புதலிலையதனாலே
இக்குலந்தனைவிட்டெச்சமையத்து
மெய்துதனியாயமதாகும்
இக்குவலயத்திலெச்சமையத்து
மிலங்கிடுஞானமுண்டதனால்
இக்குவலயத்திலெச்சமையத்து
மியற்கையைவிட்டிடலாகா.

இ - ள். இக்குலந்தனக்கு - இன்னகுலாசார முடையவர்களுக்கு,—இச்சமையமதென்றும் - இன்ன சமையாசாரத்தையே யனுட்டிக்க வேண்டு மென்றும்,—இயம்புதலிலை - வேதாகமங்கள் பிரித்துச் சொல்லவில்லை,—அதனாலே - ஆகையால்,—இக்குலந்தனை விட்டு - இந்தக் குலாசார தருமத்தை விட்டு,—எச்சமையத்தும் - மெய்யுணர் வுண்டென்று தோற்றிய எந்தச்சமையமாவ தொன்றை,— எய்துதனியாயமதாகும் - அடைகின்றது கிரமமாகும்,—இக்குவலயத்தில் - இவ்வுலகத்தின்கண்,—எச்சமையத்தி னிடத்தும்,—இலங்கிடுஞான முண்டு - விளங்காநின்ற மெய்யுணர் வென்பதுண்டு,—அதனால் - அதனாலே,—இக்குவலயத்தில் - இவ்வுலகத்தின்கண்,—எச்சமையத்தும் - எச்சமையத்தாரும்,—இயற்கையை விட்டிடலாகா - தற்சமையாசார தருமத்தைக் கைவிடக்கூடாது என்க.

வி - ம். சாதி சமையத்தின்கட்கெடும், சமையம் ஞானத்தின்கட்கெடும், ஆதலால், இக்குலந்தனக்கிச்சமையம தென்று

மியம்புதலிலே யதனலே இக்குலந்தனே விட்டெச் சமையத்து மெய்து தனியாயமதாகும் என்றார். (உ-ம்) அவிரோதவுந்தி - வருண நெறிசார்மதத்தம் மதமெய்ப், பொருளுணர் வூடிறு மூந்தீபற, பொன்றுத தொன்றே யென்றுந்தீபற. உயர்ந்த நெறியீதென் றென்றைவிட் டொன்றை, யியைந்திடுவோனு மூண்டுந்தீபற, யேதமடையா னென்றுந்தீபற. எல்லாச்சமை யிகளுந் தங்கள் தங்கள் சமையத்தில் மோட்சமுண்டென்று அளவின்றிய ஏதிட்டாந்தங்க ளெடுத்துக்கூறி யிருத்தலால் எச்சமையத்து மிலங்கிடு ஞானமுண்டென்றார். உ - ம். ஷெ ஆறுளுமோராற வாதித மென்கைதீ, தாறும் விளங்கலாலுந்தீ பற, அளவிலளவைகொடுந்தீபற. எந்தச்சமையிகளும் அந்தந்த சமையாசார நியமப்படி நடத்து அச்சமையக் கடவுளினது இரு பையாற் சமையாதீத பரம்பொருளே யடைய வேண்டும், ஆத லால் எச்சமையத்து மியற்கையை விட்டிடலாகா வென்றார். (உ-ம்.) ஷெ எத்தேவை நாமென்றிசைந் தாயதை தொழு, சத்திய பத்தியாலுந்தீபற, தனுவாதியைக் கொடுத்துந்தீபற - மற்றும் வருவனவற்றுற்காண்க. அங

அன்னியகந்தங்கவருதலகற்றி
யன்னியரசனேயுமகற்றி
அன்னியரூபநோக்குதலகற்றி
யன்னியபரிசமுமகற்றி
அன்னியசத்தங்கேட்குதலகற்றி
யன்னியநினேவதுமகற்றி
அன்னியருடனேயிணங்குதலகற்றி
யன்னியருறைவிடமகற்றி.

அன்னியர்கையில்வாங்குதலகற்றி
யன்னியர்க்கீகுதலகற்றி
அன்னியகடவுள்வணங்குதலகற்றி
யன்னியகிரியையுமகற்றி

அன்னியநூலையோதுதலகற்றி
யன்னியகேள்வியுமகற்றி
அன்னியபாகமருந்துதலகற்றி
யன்னியவகையறத்துடங்கி.

இதனுனே எச்சமையிகளுந்தேக பதனபரியாத மதன் சமையாசார ஒழுக்கங்களை கைவிடக்கூடா தென்பது கருத்து-இவை செய்யுளிரண்டும் வெளிப்படை.

சமையநற்கிரியையனைத்தையும்விடினுந்
தனக்கந்தப்பிரணவவமுதம்
அமையநின்றூறியதனையேயருந்தி
யவ்வடிவாயிடுமளவும்
சமையிகள்பாகமதனையேகொண்டு
தற்பரநிவேத்தியம்புரியம்
அமைதியைவிட்டான்மேற்கொளாதென்ப
தறிந்ததைநியமமாக்கொள்ளும்.

இ - ள். சமையம் - சமையாசாரம்,—நற்கிரியை - நல்ல கிரியாசார முதலிய,—அனைத்தையும் விடினும் - எதைக்கை விட்டாலும்,—தனக்கு-தனக்கு,—அந்தப்பிரணவவமுதம்-பிரணவாமிருதமானது,—அமையநின்றூறி-இடையீடின்றி மேலு மேலும் விருத்தியாகின்ற,—அதனையேயருந்தி - அப்பிரணவா மிருதத்தையே புசித்து,—அவ்வடிவாயிடுமளவும் - அப்பிரண வாகாரமாக விளங்குங் காலவரையில்,—சமையிகள் பாகம தனையேகொண்டு - தற்சமையிகள் செய்யும் பாகசாகங்களைக் கொண்டு,—தற்பர நிவேத்தியம் புரியும் - சிவநைவேத்தியம் செய்து புசிக்கின்ற,—அமைதியை விட்டால் - கிரமத்தைக்கை விட்டால்,—மேற்கொளா தென்பது - சாதனமுயற்சி மேலு மேலும் விருத்தியடையா தென்பது,—அறிந்து - தெரிந்து,— அதை - அச்சமையிகளாற் செய்யும் பாக்சாகத்தையே,—நியம

மாகக்கொள்ளும் - தவறின்றி உறுதிப்பாடாகப் புசித்து வர வேண்டும், என்க.

வி - ம். எந்தச்சமையிகளுந் தமக்குக்கிடைத்த புசிப்புகளை விதிப்படி அந்தந்தச் சமையகடவுளுக் கற்பிதஞ் செய்தே புசிக்க வேண்டும், அங்ஙன மின்றாயின் அதனால் அஞ்ஞான மேலிடும், அதனால் ஆன்மாவிற்கு மலம்பரிபாகமின்றி ரௌரவாதி நரகப்பிராப்தி யுண்டாம் ஆதலால், தற்பரா நிவேத்தியம் புரியும் அமைதியை விட்டான் மேற்கொளா தென்பதறிந்த தைரியமமாய்க்கொள்ளும். என்றார் - தற்பர நிவேத்தியம் புரியும் என்பதற்கு. உ - ம். தேவர் தென்புலத்தோர் துறந்தவர்க்களித்த சேடநல்லமிர்தினு மினிதாம், யாவரே யெனினு மதிதியரிறந்தோ ரிமையவரிங்கிவர்க்கின்றிக், கூவல்போலாழ்ந் தபாழ் வயறதனிற்கொட்டுதற் கமைத்தவெண்சோறு, நாவுறை புழுவா மென்மறையனைத்து நவின்றிடு மென்பர்நன் குணர்ந் தோர். அச

புரிசடையோனுக்கற்பித்துக்கொளினும்
பொருந்தியபொருளதேவேண்டும்
திரிவின்றியொன்றாய்ப்பாவித்துக்கொளினும்
செல்லல்போலொழுங்கதேவேண்டும்
அரியநல்லறத்தைவேண்டிடிற்பொருளு
மறமதாயீட்டவேண்டிடும்போல்
உரியதற்சமையத்தொழுங்கினிற்புசித்தா
லுளத்தழுக்கின்றியேவதியும்.

இ - ள். புரிசடையோனுக்கு - சிவபெருமானுக்கு,—அற்பித்து - அற்பிதஞ்செய்து,—கொளினும் - புசித்தாலும், பொருந்திய - ஆகமங்களில் விதித்த,—பொருளதே வேண்டும் - வஸ்துக்களைக் கொண்டே அற்பிதஞ் செய்யவேண்டும்,—திரி

வின்றி - மயக்கமின்றி,—ஒன்றாய்ப்பாவித்து - எல்லாஞ்சொரூபாகாரமாய்க்கண்டு,—கொளினும் - புசித்தாலும்,—செல்லல் - அறிந்துபற்றி அழுந்தி அனுபவிக்கச்செல்லும் உணர்ச்சியுண்டா யிருத்தலால்,—போல் - முன்சொல்லி யதுபோல,—ஒழுங்கதே வேண்டும் - விலக்குப்புசிப்பை நீக்கிவிதிப் புசிப்பையே புசிக்கவேண்டும் எங்ஙனமெனின்,—அரிய - அரிதாகிய,—நல்லறத்தை - நல்லதருமத்தை,—வேண்டில் - செய்யவிரும்பில்,—பொருளும் - பொருளையும்,—அறமதாய் - தருமவழித்தாய்,—ஈட்டவேண்டிடும்போல - சம்பாதிக்கவேண்டியது போலவாம்,—உரியதற் சமையத்தொழுங்கினில் - உரித்தான தனது சமையாசார நியமப்படி,—புசித்தால் - விதித்த பொருள்களைப் புசித்துவந்தால்,—ஊத்தமுக்கின்றியேவதியும்—சித்த நின்மலமாகவே விளங்கியிருக்கும், என்க.

வி - ம். பக்திமே லீட்டினாற் செய்த கண்ணப்பர் முதலாயினோரைப் போல, நிடேத பதார்த்தங்களையும் சிவார்ப்பிதஞ் செய்து புசிக்கலா மென்னுஞ் சில சமயிகளுண்டா யிருத்தலைப் பற்றி, புரிசடையோனுக் கற்பித்துக் கொளினும் பொருந்திய பொருளதே வேண்டும் என்றார். சமீரணனைப் போல விதிநிடேத மாகிய எப்பதார்த்தங் களையுஞ் சொரூபாகார மாகக்கண்டு புசிக்கலா மென்னுஞ் சிலமாயாவாத வேதாந்திக ளுண்டா யிருத்தலைப் பற்றி, அவர்களுக்குக் கலாதிகளா லறிந்து இந்திரியங்களாற் பற்றி மனாதிகளா லழுந்தியனு பவிக்கின்ற வுணர்ச்சி யுண்டா யிருத்தலால், ஞாதுருஞான ஞேயமென்னுந் திரிபுடி யுண்டு. அஃதன்றி வேதத்தில் விதி நிடேதங் கூறியிருத்தலாற் சுட்டுணர் விழந்த கைவல்லிய கால வரையில் விதிப்படியே புசித்து வரவேண்டும். ஆதலால் ஒன்றாய்ப் பாவித்துக் கொளினுஞ் செல்லல்போ லொழுங்கதே வேண்டும் என்றார் - உ - ம். பெருங்கழிநெடில். மெய்யுறு பிணிக்கு விலக்குவ தொழித்து விதித்தன கொள்ளுவன்

பிறவி, மையுறு பிணிக்கு மவ்வகை செயாமல் வருத்து மன்னே யிடைப் படுவேன், பெய்யுறு வளைக்கைத் திருநுதலுமை யாற் பெரு விழிகணை கொடுவிடாம, லெய்யுறு முரத்தோ டென் கரத்திருக்கு மீசனே மாசிலா மணியே. எசு - வது செய்யுள் முதல் இதுகாறும் ஞானிகளினது பொது விலக்கணங் கூறி இனிச் சிறப்பு விதியுணர்த்து கின்றார். அடு

ஞானசங்கமத்துக்கிந்நெறியதனி
னவிற்றிடுஞ்சாதியுஞ்சமையத்
தீனமிலாசாரமும்விசாரித்த
லியற்கையேயன்றெவரேனும்
ஊனமிலங்கந்தனிலிங்கமொன்றே
யுளபிரமாணமாய்க்கொண்டங்
கானநற்பயிக்கமவர்மனைதோறு
மங்கையேற்றருந்திடலாமால்.

இ - ள். ஞான சங்கமத்துக்கு - குருலிங்க சங்கம மாகிய துறவற ஞானிகளுக்கு,—இந்நெறி யதனில் - இச்சுத்த மார்க்கத்தினின்று அப்பியாசிக்குங் காலத்தில்,—நவிற்றிடும் - சொல்லப் பட்ட,—சாதியும் - சாதியா சாரத்தையும்,—சமையத் தீனமிலா சாரமும் - குற்றமற்ற சமையா சாரத்தையும்,—விசாரித்தல் - விசாரிக் கின்றது,—இயற்கையே யன்று - கிரமமல்ல,—எவரேனும் - இயாவ ராஷலும், — ஊனமில் - குற்றமற்ற;—அங்கந் தனில் - தேகத்தில்,—இலிங்க மொன்றே யுள - உண்டா யிருக்கின்ற இலிங்க மொன்றையே,—பிரமாணமாய்க்கொண்டு - பிரமாண மாகக்கொண்டு,—அங்கான - அவாளிடத் துண்டான,—நற்பயிக்கம் - நல்ல பிட்சையைற் அவர் மனைதோறும் - அவாள் வீடுதோறும்,—அங்கையேற்று - அழகிய கரத்தினிட மாகவாங்கி,—அருந்திடலாமால் - புசிக்கலாம் என்க. அசு

இலிங்கமென்பது தறியாதலால் அவரவர்களுக் குள்ள அந்தந்தச் சமையக்குறி யேதேனுமொன் றிருக்கக்கண்டு புசிக்கலாமென்றும் பொருள் கொள்ளப் படும்.

சடுத்தலமதினுமிலிங்கமேயாகித்
தானெனல்விடுத்தருந்தியபின்
கொடுத்தவன்றானுங்கொடுத்திடுபொருளுங்
கொள்ளுவோன்றானுமொன்றாக
அடுத்தவிம்மாயாவடிவதைநோக்கி
யகற்றியவ்வோமயமாக
விடுத்தனுதினமும்புசித்திடிலனைத்தும்
விமலவோமயமதாய்விடுமே.

இ - ள். சடுத்தல மதினும் - இந்திரியங்கள் - ரு - மன து - க - ஆக ஆறிடங்களிலும்,—இலிங்கமே யாகி - சிவமே- ஆசாராதி சடுலிங்கங்களாக யிருந்து புசிக்கின்றதென்று,—தா னெனல் விடுத்து - தானென்னும் அகங்காரத் துவத்தை யொ ழித்து,— அருந்தி - புசித்து,—பின் - பின்பு,—கொடுத்தவன்றா னும் - பிட்சை கொடுத்தவனும்,—கொடுத்திடு பொருளும் - கொடுத்த வஸ்துவும்,—கொள்ளுவோன் றானும் - புசிக்கின்ற யனும்,—ஒன்றாக-ஏகமாக,—அடுத்த - வினைக் கீடாய்வந்த,— ஞாமாயா வடிவதை - இவைகளின் மாயா வுருவத்தை,— விதிக்கியகற்றி விடுத்து - விசாரித்து விட்டு நீக்கி,—அவ்வோ காமாக - பிரண வாகார மாகக்கண்டு,—அனுதினமும் - எப் போதும்,—புசித்திடில் - அதனைப் புசிக்கில்,—அனைத்தும் - சர்வமும்,—விமலவோ மயமதாய் விடுமே - நிருமலமான பிர ணவ சொரூப மாகவே விளங்கி யிருக்கும் என்க.	அஎ

அ

சொடுப்பவன் சொடுக்கப் படுபொருள் கொள்வோன் ஆகிய மூன்றினும் மாயாம்சத்தை நீக்கிப் பிரணவாம்ச மாகக்கண்டு புசிக்க வேண்டு மென்பது கருத்து.

இன்னதன்மையவாஞ்சுத்தபாவனையி
லிரும்பிராரத்தம்போயொளிக்கும்
தன்னதுணின்றிங்கிடைவிடாதூறுந்
தக்கதோர்பிரணவவமுதம்
அன்னத்தையருந்தி முன்வடிவதுவு
மங்ஙனேவோமயமாகி
இன்னிலமதனிற்றோற்றன்மாத்திரமா
யியங்குதல்சீவன்முத்தியதே.

இ - ள். இன்ன தன்மையவாம்-இப்படிப் பட்டதான,—சுத்த பாவனையில் - சுத்த மார்க்க அப்பியாசத்தினாலே,—இரும் பிராரத்தம் போயொளிக்கும் - மாயா பிராரத்தபோக மென்பது விட்டு நீங்கிப் போய்விடும்,—தன்னது ணின்று - தனதுள்ளத்தின்க ணின்று,—இங்கு - இவ்விடத்து,— இடைவிடாதூறும் - விட்டுநீங்காது மேலுமேலும் அதிகரிக்கின்ற,—தக்கதோர் பிரணவ வமுதம் - ஒப்பற்ற பிரணவா மிருத மாகிய,—அன்னத்தை யருந்தி - அதனையே புசித்து,—முன் வடிவதுவும் - முன்னுள்ள மாயா தேகமும்,—அங்ஙனமோ மயமாகி - அப்படியே பிரண வாகாரமாய்,—இன்னில மதனில் - இவ்வுலகத்தில்,— தோற்றன் மாத்திரமாய் - தேகத் தோற்ற மாத்திரமாக,—இயங்குதல் - சஞ்சரித் திருப்பதே சீவன் முத்தியது - சீவன் முத்தி நிலையென்று சொற் படுமென்க.

அறிவிலாக்குழந்தைப்பருவத்தின்முலைப்பா
லருந்திடுங்குமாரர்காளையினில்
அறிவிலாக்குழந்தையருந்துதல்கண்டு
மதினைசசகசமாயிலதின்

அறிவிலாச்சீவத்துவப்பருவத்தி
லருந்திடுமாயையினுணவை
அறிவிலாச்சீவரருந்துதல்கண்டு
மதினசைசகசமாயின்றும்.

இ-ள். அறிவிலா - சுட்டறி வில்லாத,—குழந்தைப் பருவத்தில் சைசவப் பருவ காலத்தில்,—முலைப்பால் - தாய்முலைப்பாலை,—அருந்திடும் - புசித்திடும்,— குமாரம் - கௌமாரப் பருவம்,—காளையினில் - காளைப் பருவ மாகிய காலத்தில்,—அறிவிலாக் குழந்தை - விவேகமின்றிய குழந்தைகளானது,—அருந்துதல் கண்டும் - அப்பால் புசித்தலைக் கண்டிருந்தும்,—அதில் - அப்பாலில்,—நசை - இச்சையானது,—சகச மாயினின் - சுபாவ மாகவே நீங்கிவிட்டது போல,—அறிவிலா - பகுப்பறி வின்றிய சீவத்துவப் பருவத்தில் - பரிபாக மின்றிய சீவத்துவம் வகித்திருந்த காலத்தில்,—அருந்திடும் - புசித்திருந்த,—மாயையி னுணவை - மாயாப் புசிப்புகளை,—அறிவிலாச் சீவர் - விவேக மின்றிய வான்மாக்கள்,—அருந்துதல் கண்டும் - புசிக்கின்றதைப் பார்த்திருந்தும்,—அதில் - அம்மாயாப் புசிப்புகளில்,—நசை - இச்சையானது,—சகச மாயின்றும் - சுபாவ மாகவே நீங்கிப் போய் விடும் என்க. அக

அனமதும்பாலுஞ்சருக்கரையதுவு
மங்கனிவகைகளுந்தேனும்
இனமவையொன்றாய்க்கூட்டியருசியி
யந்- னிதையநின்றிடைவிடாதுறும்
ஞானபிரணவவமுதத்தையேயருந்திக்
விதி- களிப்பவர்மீட்டுமிச்சகத்தின்
காமினமுறவிடையவின்பையெண்ணிடுமோ
பிராரத்தமும்மிலையவற்கே.

இ-ள். அனமதும் - அன்னமும்,—பாலும் - பாலும்,—சருக்கரை யதுவும் - சருக்கரையும்,—அங்கனி வகைகளும் -

மதுரமான கனிவருக்கங் களும்,—தேனும் - தேனும்,—இன மவை - ஆகிய விவ்வருக்கங்களை யெல்லாம்,—ஒன்ருய்க் கூட்டிய ருசியின் - ஏகமாகக் கூட்டியதுபோலும் இனிக்கின்ற,—இதைய நின்று - மனதினிடத்திருந்து,—இடைவிட லாறும்—விட்டு நீங்காது மேலு மேலும் பெருகுகின்ற,—கனபிரணவ வமுதத்தையே யருந்தி - மேலான பிரணவா மிருதத்தையே புசித்து,—களிப்பவர் - சுகித்திருக்கின்ற சீவன் முத்தர்கள்,—மீட்டும் - திரும்பியும்,—இச்சகத்தின் - இப்பிர பஞ்சத்தின்,—பினமுறு விடைய வின்பை - இடை யிடைதோற்றிக் கெடுகின்ற விடைய வின்பத்தை,—எண்ணிடுமோ - புசிக்க நினைப்பரோ,—பிராரத்தமும்மிலையவற்கே - அவர்களுக்குப் பிராரத்தபோகமுங் கிடையாது. பிராரத்தமும் என்ற தொடரும்மையால் ஆகாமிய சஞ்சித முன்னமே யில்லை என்பதாயிற்று என்க.

வி - ம். முன்மருள வத்தையிற் சீவனுய்த் தேகந்தானுய்க்கிடந்த அஞ்ஞான நீங்கிப் பிரணவந் தானகப் பாவித்துச் சீவன் முத்தனுய் விடையச் சுட்டன்றி எல்லாம் பிரணவபோகமாகக் கண்டு புசித்தலால், கருத்தி லெழுந் திருக்கும் இதாகித மாகிய வாகாமியமும் அதனு லஞ்ஞானத்தி லனந்தங் கோடி சனனங் களுக்கு வித்தாகக் கட்டுண்டு கிடந்த சஞ்சிதமும் போய்விடும். அவர்கட்கு மாயாவிடைய போகானுபவமெப்படி யுண்டாம். ஆதலால் பிராரத்தமும் மிலையவற்கே என்ருர். ஒரு புருடனுக்குள்ள மூன்று மனைவியரில் இரண்டு மனைவியை அமங்கலி யென்ருல் மற்றெரு மனைவியை சுமங்கலி யென்று யெப்படி சொல்லக் கூடாதோ, அப்படியே ஆகாமிய சஞ்சிதம் போனவிடத்துப் பிராரத்த மாத்திரம் உண்டென்பது கூடா தென்பதாம்.

உபையநல்லமுதேபுசித்தனுதினமு
முபையமேவடிவதுவாகி

அபையமென் றுரைக்குமுயிர்களுக்கிரங்கி
யஞ்சலென் றவர்களை நோக்கி
உபையவன் னெறியின் பயனை முன் னுணர்த்தி
யுபநிடச்சுருதிநின் றுரைக்கும்
அபையமற் றொன் றுமிலாதவிந்நெறியே
யனுக்கிரகம்புரிந்திடுமால்.

இ-ள். உபைய நல்லமுதே - நல்லபிரணவா மிருதத்தையே,—புசித்தனுதினமும்-எப்போதும் பொசித்து,—உபையமே வடிவது வாகி - பிரணவமே வடிவமாக,—அபையமென் றுரைக்கும் - அடைக்கல மென்றடைந்த உயிர்களுக் கிரங்கி — ஆன்மாக்கள் பேரிற் றிருவுள மிரங்கி,—அஞ்சலென்று - பயப்படாதே யென்று,—அவர்களை நோக்கி - அவரது டரிபாகங்களைக் கண்டு, உபையவந் நெறியின் - கிரியா மார்க்கம் உபாசனு மார்க்க மாகிய. இரண்டு மார்க்கத்தின்,—பயனை - பிரயோசனங்களை, — முன்னுணர்த்தி - முன்ன ருபதேசித்துப் பின்பு,—உபநிடச் சுருதி நின் றுரைக்கும் - உபநிடதங்களுறுதியாகச் சொல்லப் பட்ட - அபைய மற்றொன் று மிலாத - சனனமரணபய முதலிய யாதொன் று மில்லாத,—இந்நெறியே - இச்சுத்த மார்க்கத்தையே,—அனுக்கிரகம் புரிந்திடுமால் - உபதேசிப்பர்கள். ஆல் - அசை. கக

இங்கிலைச்சின் னுள்சீவர்கணிமித்த
மிருந்தனுக்கிரகமேபுரிந்து
தங்கிலையதனினின் றருளமுதந்
தான் புசித்தருண் மயமாகி
யிங்கிலைபரமமுத்தியிற்சிவத்துக்
கங்கமாய்நிகழு முன்போலென்
றிங்கிலைசாமத்தசிப்பதமுரைக்கு
மிதுசிவாத்துவிதமென் றுணர்வாய்.

இ-ள். இந்நிலை-இப்படிப்பட்டசீவன்முத்தி நிலையில்,—சின்னுள் - சிலகாலம்,—சீவர்க ணிமித்தம் - பந்தான் மாக்கள் பொருட்டாக,—இருந்தனுக் கிரகமே புரிந்து - உபதேசித்துக் கொண்டிருந்து பின்பு,—தந்நிலை யதனினின்று - சுபாவமான தன தருணிலையி லிருந்து,—அருளமுதந் தான் புசித்து - அருளமிர்தத்தைப் புசித்து,—அருண் மயமாகி - தானருள் வடிவமாகவே விளங்கி,—அந்நிலை - அவ்வருணிலையான,—பரமுத்தியில் - பரமுத்தி நிலையில்,—சிவத்துக் கங்கமாய் - சிவாங்கமாக,—நிகழுமுன் போலென்று-பழைய படியே சிவாங்கமான அருளாகவே விளங்கி யிருக்குமென்று,—இந்நிலை - இந்நிச்சயமானது,—சாமத்து - சாமவேதத்திற் சொல்லுந் தத்துவமசி வாக்கியத்திலுள்ள,—அசிபத முரைக்கும் - அசியென்னும் பதமானது பிரதி பாதிக்கும்,—இது - இதனை,—சிவாத்து வித மென்றுணர்வாய் - சிவாத் வைதமான சுத்த மார்க்கமென் றறிவாயாக.

வி - ம். மருளவத்தையி லுள்ள சீவர்களுக்குப் பந்த நீக்கமுந் திருவருண் ஞானமு மின்மையானும் - அருளவத்தையி லுள்ள பரமுத்தர் களுக்கு ஞாதுரு ஞான ஞேயமாகிய திரிபுடியு நசித்து அருளிலதீதப்பட்டுச் சுட்டுணர் விழந்து சூட்சும ஞப்தி மாத்திரமாக நிற்பவர்களாதலால், இவ்விருவர்களாலும் ஆன்மாக்களுக்குப் பாசமோசனஞ் செய்து உண்மை ஞானத்தை உபதேசிக்க முடியாதாதலால், இவ்விரண்டினது மத்தியமாகி விளங்கும் பிரணவாவத்தை யாகிய சீவன் முத்தி நிலையில் உலகோபகாரமாகச் சிலகால மிருந்து அன்பர்களுக்கும் அனுக்கிரகிக்க வேண்டு மாதலால் இந்நிலைச் சின்னுட் சீவர்கா ணிமித்த மிருந்தனுக் கிரகமேபுரிந்தென்ருர்.

வி - ம். மருளவத்தைநீங்கி யருளவத்தை யடைந்தாற் போதாதோமத்தியிற் பிரணவாவத்தை யானசீவன் முத்திநிலை யென்பதொன்றேதுக்காகக் கூறவேண்டும் எனின், பிறவிப்

பிணியாளனாகிய வொருவன் ஈதின்ன பிணியென்றும் அதற் கேற்ற ஔஷத பத்யாதிக ளிதுவென்றும் அறிந்து புசித்து நிவர்த்தித்துக்கொள்ள முடியாது. கைம்மாறு கருதாத ஒரு தரும வைத்தியன் கிருபையால் ஈதின்ன வியாதி யென்ற றிந்து அதற்கேற்ற வவிழ்த பத்தியாதிகளை யறிந்து கொடுத்து நீக்க வேண்டுவதுபோல, ஓராசாரியன் வேண்டும். அவ்வா சாரியத்துவ வதிகாரம் சீவன் முத்தனுக்கே யல்லது பெத்தத் திசையையுடைய சீவர்களுக்கும் முத்தித்திசையை யுடைய பரமுத்தர்களுக்குங்கூடாது. அஃதெங்ஙனமெனின் விடந் தீண்டி மூர்ச்சித்திருக்கின்ற வோர்புருடன் அதை நிவர்த்தி செய்யத்தக்க வவிழ்தமீ தென்றறிந்து பிறருக்குச் சொல் லான்போல, ஆணவசத்தியாற்றம திச்சாஞானந் தடைப்பட் டுள்ள பெத்தான்மாக்களுக்கு அதை நிவர்த்திக்கத்தக்கமுத்தி விவகாரந்தோற்று தாதலானும், முத்தியை யடைந்துள்ள பர முத்தர்கள் திரிபுடிஞானமுஞ் சுட்டுப் போதமுமிழந்து கதி ரொளியிற் கலந்த கண்ணுக்கு வேறுபொருட் டோற்றா விற ந்து, அவ்வொளியாய் நிற்றல்போல அருளிற்கலந்தவ் வருள் தாளுய் நிற்றலானும், இவர்களிருவருக்கும் பந்தமுத்தி விவகா ரங்களை யறிந்து வுபதேசிக்க முடியாது. ஆதலால் இவ்விரு வித விவகாரங்களையும் அறிந்து வுபதேசிக்க மத்தியிற் சீவன் முத்தி நிலையென்ப தொன்று வேண்டும். இவரது மகிமையை எசு - வது செய்யுளிற்காண்க. அங்ஙன மின்றாயின் உலகத்தி ன்மை ஞானோபதேசக் கிரம குருசாம்பிரதாய மிறந்து மாக்க ளவதிக்காளாய் விடுவர்கள். உ - ம். வேதாந்த மணி. "அதனது காரியமாகு முடம்பாதிநிற்கு மதனு பிரமஞானந் தோன்றும் பொழுதே - சிதைதருமஞ்ஞான டனுடம்பொழியுமாயிற் றிகழ்பிரம வித்தியாசம் பிரதாயத் தின் - கதிபொழியுமதனுைம் பரசிவனாற்பிரமன்கமலனுயர் பிரசாபதியவனுன்மனுவற் - புதமனுவான் மனிதருணர்ந்தன

ரெனவே புகல்சுருதிவிரோதமா மதனுனுமன்றே. என்பதனுற் காண்க. கஉ

என்றெனையாண்ட விருத்தவம்பிகையே
யிதையத்தும் விளக்கியென்வாக்கு
நின்றுரைத்திந்த நெறிசொலுமருத்த
நினக்கும்வாய்த் திடுமெனவாழ்த்திச்
சென்றெனதுடலுங் கரணமுஞ்சகமுஞ்
சேர்ந்திடும்போகமுந்தானுய்
நின்றனள்கண்டே னிதற்குக்கைம்மாறென்
னிருமலைவாழிநீடூழி.

இ - ள். என்று - இவ்விதமாக விச்சுத்த மார்க்கத்தை யனுக்கிரகித்து,—எனை - அடியேனை,—ஆண்ட - அடிமைகொண்டருளிய,—விருத்தவம்பிகையே - பெரியநாயகிதானே,—இதையத்தும் - எனதுள்ளத்தின் கண்ணும்,—விளக்கி - தன் வடிவாக,—நின்றுணர்த்திய தல்லாமலும்,—வாக்கி னிலும் - அடியேனுடைய வாக்கினிடமாகவும்,—நின்றுரைத்து - எழுந்தருளியிருந் திந்நூலைச்சொல்லி,—இந்தநெறி - இச்சுத்தமார்க்கத்தில்,—சொலுமருத்தம் - அருத்தானுபவங்கள்,—நினக்கும்-உனக்கும்,—இந்நூலைக் குருமுகமாகக்கேட்கும் அன்பர்களுக்கும்,—வாய்த்திடுமென்று -கிடைக்கக்கடவதென்று,—வாழ்த்தி - ஆசீர்வதித்து,—எனது - என்னுடைய,—உடலும்-தனுவும்,—கரணமும் - கரணங்களும்,—சகமும் - புவனங்களும்,—போகமும் - போகங்களும்,—தானுய் நின்றனள் - தானுகவே விளங்கியிருந்தனள்,—சென்று கண்டேன் - இதனைச் சுவானுபூதிவழித்தாய்ச் சென்று கண்டு கொண்டேன்,—இதற்கு - இவ்வுபகாரத்திற்கு,—கைம்மாறென் - என்னுற்செய்யுங்கைம்மாறென்னை யிருக்கின்றது,—நிருமலைவாழி நீடூழி - பெரியநாயகி நீயெப்போதும் வாழ்ந்திருக்கக் கடவது. கூ

முற்றும்.

பெரிய நாயகியம்மை துணையுண்டாகவும்.

---